உ

சிவமயம்

ஈரோடு மாவட்டம்

# திருப்பாண்டிக் கொடுமுடி

# அருள்மிகு மகுடேசுவர சுவாமி

# அருள்மிகு வீரநாராயணப் பெருமாள் திருக்கோயில்





# தல வரலாறு

# அன்பான வேண்டுகோள்

திருக்கோயிலின் சார்பில் நியாய விலைக்கடை நடைபெற்று வருகின்றது. பக்தர்கள் பூஜை சாமான்களை குறைந்த விலையில் வாங்கி பயன் அடைய வேண்டுகிறோம்.

தங்கள் காணிக்கை வகைகளை உண்டியலில் செலுத்தவும் அல்லது அலுவலகத்தில் நேரில் செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இத்திருக்கோயிலில் ஆதரவற்ற சிறார்களுக்கென அன்பு இல்லம் நடத்தப்பட்டு வருகிறது. இச்சிறார்களுக்கு உதவிட விரும்புவோர் செயல் அலுவலரை தொடர்பு கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

செயல் அலுவலர்.

வந்தவன். இவன் கொடுமுடி லிங்கருக்கு அபிஷேகம், நித்தியப்படித்தரம், நந்தாவிளக்கு முதலியவைகளுக்கு கட்டளைகள் ஏற்படுத்தியதுடன் சோலை முதலியவைகளையும் அமைத்துள்ளான். பாண்டிய மன்னர்கள் மேல் கரையரைய நாட்டிலுள்ள 16 கிராமங்களில் 8 கிராமங்களை மகுடலிங்கருக்குத் தேவதானம் விட்டு 8 கிராமங்களை நாட்டுத் தலைவர்களின் ஆட்சிக்குட்படுத்தி வைத்தார்கள். இது "நாடெட்டுத் தானமெட்டு" என்று வழங்குகிறது.

பிற்காலத்தில் 1909-ஆம் ஆண்டு, 1922-ஆம் ஆண்டு நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் திருப்பணிகள் செய்யப்பட்டு 16-4-1909 லும், 1922 -ஆம் ஆண்டிலும் குடமுழுக்கு நடைபெற்றன. கோயில் திருப்பணி செய்த நகரத்தார்கள் தேவகோட்டை ஜமீன்தார் அழ.அரு. குடும்பத்தினரும், கானாடு காத்தான் சா.அ. குடும்பத்தாரும், க.வெ. குடும்பத்தாரும் ஆவார்கள். 1974-ஆம் ஆண்டு திரு.கே.ஆர். பாலசுப்பிரணியம் அவர்கள் தலைமையில் கோயில் திருப்பணி செய்து 1-7-74 ஆம் நாள் குடமுழுக்கு விழா நடைபெற்றது.பின்னர் சட்டமன்ற உறுப்பினர் திருமதி கவிநிலவு தர்மராஜ் அவர்கள் தலைமையிலும், அதன் பின்னர் சட்டமன்ற உறுப்பினர் திருமதி. சுப்புலட்சுமி ஜெகதீசன் அவர்கள் தலைமையிலும் திருப்பணிக்குழுக்கள் அமைத்து பல்வேறு திருப்பணிகள் நிறைவேற்றப்பட்டு 25-8-1999 அன்று குடமுழுக்கு நடைபெற்றுள்ளது.

## 9. சிற்பங்கள்

கோயிலில் இயற்கையும், செயற்கையுமாகிய சிற்பங்கள் அமைந்துள்ளன. மூலலிங்கம் சுயம்புச் சிற்பம் கோயிலே சிற்பக் கோயில். எல்லா மூர்த்திகளும் ஒருங்கே அமைக்கப் பெற்ற இடம். முன்னுள்ள மூன்று கோபுரங்களும் அழகிய சிற்பங்கள் பொருந்தியவை. கோயிலிலுள்ள மண்டபங்களும், தூண் வரிசைகளும் கவர்ச்சிகரமாய் உள்ளன. மூர்த்திகளின் சிலைகளும், உற்சவ விக்கிரகங்களும் மிகவும் பெரியவை. சில உற்சவச் சிலைகள் பூமியில் கண்டெடுக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளன. ஆஞ்சநேயரின் சிலையும் பெரியதாய் உள்ளது. எனவே, கோயிலும் மூர்த்திகளும் நல்ல சிற்பங்கள் அமைந்து தெய்வீகத் தன்மையைக் காட்டுகின்றன.

## 12. திருவிழாக்கள்

ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் பெருந்திருவிழா நிகழும், தினந்தோறும் மூர்த்திகள் பல வாகனங்களில் புறப்படும். 10-ஆம் நாள் தேரோட்டம் நடைபெறும். ஆடி 18-ல் பெருந்திரளான மக்கள் காவிரியில் நீராடுவர். மூர்த்திகள் காவிரிக்கு எழுந்தருள்வர். அன்றைக்கு இரவில் பச்சை மண்ணில் தாளி செய்து அதில் மாவிளக்கு, பொட்டு, விளக்கு, காரை, காதோலை, கருமணி, சிற்றாடை, தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு முதலியவைகளை வைத்துக் கொண்டு போய் நடு ஆற்றில் விட்டு வருவர். ஆடி மாதத்தில் அம்மனுக்கும், லட்சுமிக்கும் சந்தனக்காப்பு ஆராதனை நிகழும். புரட்டாசி மாதத்தில் வடிவுடைய நாயகி அம்மனுக்கும், தாயார் திருமங்கை நாச்சியாருக்கும் நவராத்திரி விழா நடைபெறும். ஐப்பசியில் அன்னாபிஷேகம், கந்தசஷ்டி, சூரசம்காரம் நடைபெறும். கார்த்திகையில் தீபம், கடைசி சோமவாரத்தில் சங்காபிஷேகமும் நிகழும். மார்கழியில் திருவாதிரை நாளிலும், ஏகாதசி நாளிலும் நடராஜரும், பெருமாளும் புறப்படும். விடியற்காலையில் திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்கள் ஒலிபரப்பப்படும். தைப்பூச நாளில் தீர்த்த விழா நிகழும். மாசி மாதம் சிவராத்திரி நாளில் இரவில் நான்கு காலங்களிலும் அபிஷேக ஆராதனை நடைபெறும். இது நித்திய சிவராத்திரி, மாத சிவராத்திரி, யோக சிவராத்திரி, பட்ச சிவராத்திரி, மகா சிவராத்திரி என ஐந்து வகைப்படும்.

> *"ஆதியும் அந்தமும் இல்லாதபரம் பொருளான பரமேஸ்வரன்*
> *நள்ளிரவில் தம்மை லிங்கோற்பவ மூர்த்தி ஆக விஸ்வரூபம்*
> *எடுத்துக்காட்டிய நாளே சிவராத்திரியாகும்"*
>
> *(காமகோடி)*

மற்றும் மாதக் கார்த்திகை நாட்களிலும், பிரதோஷ காலங்களிலும் சிறப்பு வழிபாடுகள் நிகழும். இக்கோயிலில் நிகழும் திருவிழாக்களில் சிவபெருமானும், திருமாலும் சேர்ந்தே புறப்பட்டு காட்சி தருவது ஒரு

*உலகெலாம் உய்ய உறுதியாம் பதிகம்*
*உரைத்துமெய் உணர்வறா ஒருமை*
*நிலவிய சிந்தை யுடன்திருவருளால்*
*நீங்குவர் பாங்குநற் பதிகள்*
*பலவுமுன் பணிந்து பரமர்தாள் போற்றிப்*
*போந்துதன் பனிமலர்ப் படைப்பைக்*
*குலவும்அக் கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர்*
*குறுகினார் முறுகும்ஆ தரவால்* *88*

## 7. அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்

*தனதனத் தனனத் தனதான*
*தனதனத் தனனத் தனதான*

இருவினைப் பிறவிக் கடல்மூழ்கி
இடர்கள் பட்டலையப் புகுதாதே
திருவருட் கருணை ப்ரபையாலே
திறமெனக் கதியைப் பெறுவேனோ
அரியயற் கறிதற் கரியோனே
அடியவர்க் கெளியற் புதநேயா
குருவெனச் சிவனுக் கருள்போதா
கொடுமுடிக் குமரப் பெருமானே. (1)

*தாந்தத் தனதன தாந்தத் தனதன*
*தாந்தத் தனதன தனதான*

காந்தட் கரவளை சேந்துற் றிடமத
காண்டத் தரிவைய ருடனுரைசி
காந்தத் துறவென வீழ்ந்தப் படுகுறி
காண்டற் கனுபவ விதமேவிச்
சாந்தைத் தடவிய கூந்தற் கருமுகில்
சாய்ந்திட் டயில்விழி குழைமீதே
தாண்டிப் பொரவுடை தீண்டித் தனகிரி
தாங்கித் தழுவுதல் ஒழியேனோ
மாந்தர்க் கமரர்கள் வேந்தர்க் கவரவர்

# திருப்பாண்டிக் கொடுமுடி




# மூவர் தேவாரமும் பெற்ற தலம்



உ



# அருள்மிகு மகுடேசுவரர் வீரநாராயணப் பெருமாள்

## திருக்கோயில்

## திருப்பாண்டிக்கொடுமுடி

## ஈரோடு மாவட்டம்.

அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

திருக்கோயில் தல வரலாறு



அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

பதிப்பித்தோர்

திருக்கோயில் வெளியீடு

2002

திருத்திய எட்டாம் பதிப்பு : 2002

மொத்த புத்தகங்கள் 2000

விலை ரூபாய் : 15.00

இந்த தலவரலாறு புத்தகம் விற்பனை மூலம் கிடைக்கும் வருமானம் முழுவதும் மாண்புமிகு தமிழகமுதல்வர் அவர்களின் "அன்னதான திட்டத்திற்கு" கொடுமுடி அருள்மிகு மகுடேசுவரர் திருக்கோயில் பயன்படுத்திக் கொள்ளும் வகைக்கு, உபயதாரர் **திரு. எஸ். சொக்கலிங்கம்,** B.E., ஒசூர் அவர்களால் அச்சிட்டு வழங்கப்பட்டுள்ளது.

டைப் செட்டிங்
& பிரிண்டிங் : ஜூபிடர் பிரிண்டர்ஸ், ஒசூர் - 635 109.
போன் : 525935

73-2

**தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையத் துறை**

புரட்சித் தலைவி, டாக்டர்

மாண்புமிகு. **ஜெ ஜெயலலிதா** அவர்கள்

தமிழக முதல்வர்

மாண்புமிகு. **பி.சி. இராமசாமி** அவர்கள்

இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர்.

திரு. **ஜி. இராமகிருஷ்ணன்** இ ஆ ப அவர்கள்

ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை. சென்னை.

திரு. **தி. இராஜமாணிக்கம்** பி.ஏ.பி.எல்., அவர்கள்

இணைஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை. கோவை.

திரு. **சோ. அழகர்சாமி** எம்.ஏ.,பி.எல்., அவர்கள்

உதவி ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை. ஈரோடு.

திரு. **சி. குமரதுரை** பி.எஸ்ஸி.,பி.எல்.,

செயல்அலுவலர்

அருள்மிகு மகுடேசுவரர் வீரநாராயணப்பெருமாள் திருக்கோயில்

கொடுமுடி.

திரு. **கே.எஸ். சுப்ரமணியம்** அவர்கள்

தலைவர், அறங்காவலர் குழு.

திரு. **எம். பழனிச்சாமி** அவர்கள் அறங்காவலர்.

திரு. **எஸ். மனோகரன்** அவர்கள் அறங்காவலர்.

திரு. **கே.வி. குணசேகரன்** அவர்கள் அறங்காவலர்.

திருமதி. **ஆர். மாரியம்மாள்** அவர்கள் அறங்காவலர்.

# திருப்பாண்டிக் கொடுமுடி




# மூவர் தேவாரமும் பெற்ற தலம்



# இறை அன்பர்களுக்கு

பெறுதற்கரிய இம்மானிடப் பிறவி பெற்றுள்ள நம் மக்கள் சமுதாயம் நன்னெறி கொண்டு அமைதியுடன் வாழும் நமது வாழ்க்கையின் அடிப்படை அம்சமே ஆத்மசக்தியால் அமைக்கப்பெற்றது என்று ஆன்றோர் கூறியுள்ளார்கள். அத்தகைய ஆத்ம ஞானத்தை அருளவும், கடவுள் உறைவிடம் எனப்படும் திருக்கோயில்களை ஆன்றோர்கள் அமைத்துச் சென்றிருக்கின்றார்கள். அத்தகைய கோயில்கள் நமது தமிழ்நாட்டில் காணும் இடங்களிலெல்லாம் பலவகைச் சிறப்புகளுடன் அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். அதனால்தான் "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்றும், "ஆலயம்தொழுவது சாலவும் நன்று" எனவும் பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள்.

அத்தகைய திருக்கோயில்களை பேணிப் பாதுகாத்து அறங்காத்து வரும் நமது தமிழக அரசின் தமிழ்நாடு அறநிலைய ஆட்சித்துறை இவ்வகையில் தனிச்சிறப்புடன் தொண்டாற்றி வருகின்றது. அத்தகைய பணியில் பழங்காலச் சின்னங்களையும், திருக்கோயில்களையும், கோயிற் சிற்பங்களையும் பாதுகாத்து சமய உண்மைகளைப் பரப்புவதிலும், புகழ்பெற்ற தலங்களின் திருப்பணிகளை செய்வதிலும் அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு. பி. சி. இராமசாமி, அவர்கள் ஆர்வத்துடனும் ஈடுபாட்டுடனும் ஆவன செய்து வருகின்றார்கள். அறநிலையைத்துறை ஆணையாளர் அவர்களும் ஆர்வத்துடன் ஆவன செய்து வருகிறார்கள்.

பழம்பெருமை பெற்ற இத்திருக்கோயில் ஈரோடு மாவட்டத்தில் தென்கிழக்கு மூலையில் காவிரி நதியின் கரையில் அமைந்துள்ளது. மூவர் தேவாரங்களும் பாடப்பெற்ற சுயம்பு லிங்கமாக இறைவன் எழுந்தருளியுள்ளான். இத்தலம் புராண வரலாறுகள் கொண்டது. இந்தத் தலவரலாறுகள் வடமொழியிலும் உள்ளன. பெயர் தெரியாத தமிழ்ப்புலவர் ஒருவரால் எழுதப் பெற்ற நூலிலிருந்தும், சாமக்குளம் வெங்கட்ராமதாசரென்பவரால் எழுதப் பெற்ற நூலிலிருந்தும் மற்றும் பல விவரங்களிலிருந்தும் தொகுத்து கொடுமுடி ஸ்ரீ சங்கரர் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியராயிருந்த வித்வான் வே.ரா.தெய்வசிகாமணிக்கவுண்டர் அவர்களால் எழுதப் பெற்ற திருப்பாண்டிக் கொடுமுடித் தல புராணம் என்னும் நூல் 1944-ல் திருக்கோயில் நிர்வாகத்தினரால் வெளியிடப்பட்டது. தற்போது திருத்திய எட்டாம் பதிப்பாக இந்நூல் திருக்கோயில் வெளியீடாகக் கொண்டு வரப்படுகிறது.

ஏற்கனவே 1944-ல் வெளியிடப் பெற்ற திருப்பாண்டிக் கொடுமுடித் தல புராணத்திலிருந்தும், திருக்கோயில் ஓதுவார் புலவர் திரு. கொ.கு. சேதுபதி தேசிகர் எழுதிக் கொடுத்த குறிப்புகளிலிருந்தும், திருச்சி தமிழாசிரியர்திரு.ஆர்.பஞ்சநாதம்பிள்ளை அவர்களால் திருக்கோயிலுக்கு எழுதப் பெற்ற திருப்பாண்டிக் கொடுமுடி கோயில்கள் வரலாறு என்ற கையெழுத்துப் பிரதியிலிருந்தும் தொகுக்கப் பெற்று 1982-ல் திருக்கோயிலால் வெளியிடப்பெற்ற திருக்கோயில் தல வரலாறு நூலின் அடிப்படையில் எட்டாவது பதிப்பாக வெளியிடப்படுகிறது.

எட்டாம் பதிப்பாக இந்நூல் வெளியிட பெரிதும் உதவி புரிந்த மதிப்பிற்குரிய ஜோதிடர். திரு. எஸ். சொக்கலிங்கம்B.E. முன்னாள் தமிழ் நாடு பொதுப்பணித்துறை பொறியாளர் அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக்கொண்டு இந்நூலை கொடுமுடி அருள்மிகு மகுடேசுவரர் திருவடியில் வணங்கிச் சமர்ப்பிக்கின்றேன்.

தங்கள்,
**சி. தனபால்**
நிர்வாக அதிகாரி.

## அருள்மிகு மகுடேசுவர சுவாமி வீர நாராயணப் பெருமாள் திருக்கோயில், கொடுமுடி.

## அறங்காவலர்களின் பதவிக்காலம்.

| பெயர் | பதவிக்காலம் |
| --- | --- |
| திரு. கே. பி. கனக சபாபதி கவுண்டர், தலைவர் அறங்காவலர் குழு<br>திரு. கே.ஏ. கனக சபாபதி கவுண்டர், அறங்காவலர்<br>திரு. சுப்பையா, அறங்காவலர்<br>திரு. கே.எஸ். நாராயணன், அறங்காவலர்<br>திருமதி. கே.ஏ. முத்துலட்சுமி அம்மாள், அறங்காவலர்<br>திரு. கே. துரைசாமி தலைவர், அறங்காவலர் குழு | 1959 முதல்<br>1964 வரை |
| திரு. பி. பழனியப்ப கவுண்டர், அறங்காவலர்<br>திருமதி. கே.ஏ. முத்துலட்சுமி அம்மாள், அறங்காவலர்<br>திரு. கே.ஏ. கனக சபாபதி கவுண்டர், அறங்காவலர்<br>திரு. கே. கருப்பன், அறங்காவலர்<br>திரு. கே. ஆர். பாலசுப்பிரமணியம், தலைவர் அறங்காவலர் குழு | 1964 முதல்<br>1969 வரை |
| திரு. கே.பி. தன்னாசி, அறங்காவலர்<br>திரு. எம். துரைசாமி, அறங்காவலர்<br>திரு. கே. எம். சண்முகம், அறங்காவலர்<br>திரு. கே. எஸ். பழனியப்பன், அறங்காவலர் | 23.7.1970 முதல்<br>27.7.1973 வரை |
| திரு. கே. பி. தன்னாசி, தலைவர் அறங்காவலர் குழு<br>திரு. கே. ஆர். பாலசுப்பிரமணியம், அறங்காவலர்<br>திரு. கே. எம். சண்முகம், அறங்காவலர்<br>திரு. பி.எம். குழந்தைவேல், அறங்காவலர்<br>திரு. எம். சுப்பன், அறங்காவலர் | 6.8.1973 முதல்<br>31.5.1976 வரை |
| திரு. கே.எஸ். சுப்பிரமணியம், தலைவர் அறங்காவலர் குழு<br>திரு. பி.சி.ராமசாமி, அறங்காவலர்<br>திரு. ஆர். கோபால், அறங்காவலர்<br>திரு. ஆர். சுந்தரம், அறங்காவலர்<br>திரு. கே. வீரன், அறங்காவலர் | 5.10.1979 முதல்<br>4.10.1982 வரை |

உ

| பெயர் | பதவிக்காலம் |
|---|---|
| திரு. கே. எஸ். சுப்பிரமணியம்,<br>தக்கார் | 5.10.1982 முதல்<br>16.12.1987 வரை |
| திரு. கே.எஸ். சுப்பிரமணியம், தலைவர் அறங்காவலர் குழு<br>திரு. பி.சி. ராமசாமி, அறங்காவலர்<br>திரு. பி. வெங்கடசாலம், அறங்காவலர்<br>திரு. எஸ். மனோகரன்,அறங்காவலர்<br>திரு. கே. ராமன் அறங்காவலர் | 17.12.1987 முதல்<br>16.12.1990 வரை |
| திரு. தி. இராசமாணிக்கம் பி.ஏ.பி.எல்.,<br>உதவி ஆணையர் / தக்கார் | 11.03.1991 |
| திரு. கே.ஏகாம்பரநாதன் பி.ஏ.,<br>உதவி ஆணையர் / தக்கார் | 20.6.1993 |
| திரு. கே.எஸ். சுப்பிரமணியம், தலைவர் அறங்காவலர் குழு<br>திரு. பி.சி. ராமசாமி, அறங்காவலர்<br>திரு. கே. பாலசுப்பிரமணியம் பி.எஸ்.சி. அறங்காவலர்<br>திரு. கே.எஸ். சாமிநாதன், அறங்காவலர்<br>திரு. ஆர். கோபால், அறங்காவலர் | 21.6.1993 முதல்<br>4.9.1996 வரை |
| திரு. எம். நிர்மல்குமார் பி.எல்.,<br>உதவி ஆணையர் / தக்கார் | 5.9.1996 |
| திரு. கே. துரைசாமி, பி.எல்.,<br>உதவி ஆணையர் / தக்கார் | 4.12.1996 |
| திரு. மு. நடராசன், தலைவர் அறங்காவலர் குழு<br>திரு. கொ.ப. தன்னாசி அறங்காவர்<br>திரு. நா. சின்னப்பன் அறங்காவர்<br>திரு. துரை.நல்லசாமி அறங்காவர்<br>திரு. மொ. கணபதி அறங்காவர் | 8.11.1997 முதல்<br>7.11.2000 வரை |
| திரு. இரா.பத்மனாபன் பிஎஸ்சி.பிஎல்<br>உதவி ஆணையர் / தக்கார் | 8.11.2000 |
| திரு. இரா.வெங்கடேசன் பி.ஏ.பிஎல்<br>உதவி ஆணையர் / தக்கார் | 1.12.2001 முதல் |

# அருள்மிகு மகுடேசுவர சுவாமி வீர நாராயணப் பெருமாள் திருக்கோயில், கொடுமுடி.

## பணி புரிந்துள்ள நிர்வாக அதிகாரிகள்

| வரிசை எண் | பெயர் | பதவிக்காலம் |
|---|---|---|
| 1. | திரு. ஆர்.கோவிந்தன் | 01.07.1966 |
| 2. | திரு. டி.ஏ. முருகேசன் | 01.08.1967 |
| 3. | திரு. வி.ஆர். சம்பத்குமார் பி.ஏ., | 26.11.1968 |
| 4. | திரு. டி.ஏ. முருகேசன் | 01.01.1968 |
| 5. | திரு. டி.என். பரமசிவம் பி.ஏ., | 08.08.1970 |
| 6. | திரு. ஏ. பாண்டியன் | 17.10.1970 |
| 7. | திரு. ஆர். கோவிந்தன் (கூடுதல் பொறுப்பு) | 02.07.1974 |
| 8. | திரு. எம். இராமசாமி | 14.06.1974 |
| 9. | திரு. டி. முனியப்பன் பி.ஏ. | 09. 06.1974 |
| 10. | திரு. வி.ஆர். சம்பத்குமார் பி.ஏ. | 12.07.1974 |
| 11. | திரு. கே. முத்துக்கிருஷ்ணன் (கூடுதல் பொறுப்பு) | 13.04.1976 |
| 12. | திரு.ஏ. துரை ராஜு பி.காம் | 03.05.1976 |
| 13. | திரு. கே. சஞ்சீவி | 28.06.1979 |
| 14. | திரு. ஏ. துரை ராஜு பி.காம் | 27.07.1981 |
| 15. | திரு. எஸ். பொன்னுசாமி பி.எஸ்சி.பி.எல் (கூடுதல்) | 01.09.1984 |
| 16. | திரு. பி. தியாகராஜன் | 15.10.1984 |
| 17. | திரு. எம். இராதா கிருஷ்ணன் எம்.ஏ.டி.பி.எம். (கூடுதல்) | 24.10.1987 |
| 18. | திரு. ஆர். செல்வராஜ் எம்.ஏ. | 01.09.1987 |
| 19. | திரு. கே. பூபதி பி.ஏ., | 01.09.1989 |
| 20. | திரு. எஸ். கமலக்கண்ணன் பி.ஏ., | 21.09.1989 |
| 21. | திரு. எம். இராமகிருஷ்ணன் பி.ஏ., | 04.10.1990 |
| 22. | திரு. வி. பூர்ணலிங்கம் பி.ஏ., | 01.02.1995 |
| 23. | திரு. கே. பழனிவேலு எம்.ஏ.பி.எல்., | 01.08.1995 |
| 24. | திரு. ஆர். குப்புசாமி பி.ஏ.எம்.காம்., | 11.01.1996 |
| 25. | திரு. எஸ். கணபதி பி.ஏ., | 02.04.1996 |
| 26. | திரு. எம். இராதா கிருஷ்ணன் எம்.ஏ.டிபிஎம்.,(கூடுதல்) | 26.06.1998 |
| 27. | திரு.எஸ். தமோதரன் பி.ஏ.பி.எல் | 23.07.1998 |
| 28. | திரு. க. குருசாமி எம்.ஏ., (கூடுதல்பொறுப்பு) | 09.11.1998 |
| 29. | திரு. சி. தனபால் பி.ஏ. | 05.03.1999 முதல் |

## பொருளடக்கம்

## திருக்கோயில் விளக்கம்

| | | |
|---|---|---|
| கோயில் | : | திருப்பாண்டிக் கொடுமுடி |
| இடம் | : | கொடுமுடி |
| மூலவர் | : | அருள்மிகு மலைக்கொழுந்தீசர் (மகுடேசுவரர்) |
| தேவியார் | : | அருள்மிகு வடிவுடைநாயகி (சௌந்திரவள்ளி) |
| பெருமாள் | : | அருள்மிகு வீரநாராயணப் பெருமாள் |
| தேவியார் | : | அருள்மிகு திருமங்கை நாச்சியார் (மகாலட்சுமி) |
| தனி சந்நிதி | : | அருள்மிகு பிரம்மா (வன்னி மரத்தடியில்) |
| தீர்த்தம் | : | காவிரி, தேவ தீர்த்தம், பரத்துவாச தீர்த்தம், பிரம்ம தீர்த்தம் |
| தல விருட்சம் | : | வன்னி மரம் |
| சுற்றளவு | : | கீழ்மேல் அடி 640. தென் வடலடி 434 அடி |
| தலச் சிறப்பு | : | மும்மூர்த்தி தலம் மூவரால் பாடப்பெற்றது அருணகிரி நாதரால் திருப்புகழ் பாடப் பெற்றது. |

ஈரோடு மாவட்டம், ஈரோடு வட்டம், கொடுமுடி இரயில் நிலையத்துக்குப் பக்கத்தில் காவிரிக் கரையில் திருக்கோயில் அமைந்துள்ளது. மிகப் பழமையான திருக்கோயில். இரயில் வசதியும் பல முக்கிய நகரங்களில் இருந்து வருவதற்கு பேருந்து வசதியும் உள்ளது.

# அன்பான வேண்டுகோள்

திருக்கோயிலின் சார்பில் நியாய விலைக்கடை நடைபெற்று வருகின்றது. பக்தர்கள் பூஜை சாமான்களை குறைந்த விலையில் வாங்கி பயன் அடைய வேண்டுகிறோம்.

தங்கள் காணிக்கை வகைகளை உண்டியலில் செலுத்தவும் அல்லது அலுவலகத்தில் நேரில் செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இத் திருக் கோயிலில் ஆதரவற்ற சிறார்களுக்கென அன்பு இல்லம் நடத்தப்பட்டு வருகிறது. இச்சிறார்களுக்கு உதவிட விரும்புவோர் செயல் அலுவலரை தொடர்பு கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

செயல் அலுவலர்.

உ

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருப்பாண்டிக் கொடுமுடி திருக்கோயில்கள் தல வரலாறு

"சிட்டனைச் சிவனைச் செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை ஆல நிழலமர்
பட்டனைத் திருப் பாண்டிக் கொடுமுடி
நட்டனைத் தொழ நம்வினை நாசமே"
(திருநாவுக்கரசர்)

## 1. கோயில்களும், குறிகளும்.

**ஆ**தியந்தங் கடந்த பரம்பொருளாகிய இறைவன் உலகத்திலுள்ள பல உயிர்களும் துன்பம் நீங்கி இன்பம் பெற்று உய்யும்வண்ணம், தன் கடந்த நிலையான அருவ நிலையிலிருந்து இறங்கி இப்பூவுலகில் ஆங்காங்குள்ள பல தலங்களில் உருவத்திருமேனி கொண்டு எழுந்தருளியிருந்து பக்தியுடன் வழிபடும் அடியார்களுக்கு அருள் செய்து வருகிறான். அத்தகைய சிறப்பிடங்களே ஆலயங்களாகும். பசுவின் உடல் முழுவதும் பால் மறைந்திருந்த போதிலும், மடியின் மூலமாகவே பால் வெளிப்படுவது போலவும், சூரியன் எங்கும் பரவியிருந்த போதிலும் பளிங்கு கண்ணாடியின் மூலமே கிரணங்கள் விரைவில் வெளிப்படுவது போலவும், நிலத்துக்கடியில் நீர் இருந்த போதிலும் தோண்டிய இடத்தில் தானே நீர் தோன்றுவது போலவும், இறைவன் எங்கும் வியாபித்து இருந்த போதிலும் பெரியோர்கள் அமைத்த ஆலயங்களில் உள்ள மூர்த்திகளின் மூலமாகவே இறைவன் வெளிப்பட்டு அன்பர்களுக்கு அருள் செய்வான். "இருஞ் சுரபிக்கெங்கும் உருக்காண ஒண்ணாத பால் முலைப்பால் விம்மி ஒழுகுவது போல வெளிப்பட்டருள்வன் அன்பர்க்கே"

(சிவஞான சித்தியார்)

"எங்கும் சிவனிருப்பான் ஆனாலும் ஏசற்ற
சங்கமத்தும் சற்குருவின் தன்னிடத்தும் - லிங்கத்தும்
ஆவினுடம் பெல்லாமும் ஆவரித்து நிற்கினும் பால்
பாவுமுலைக் கண்மிகுதிப் பார்"

*(சிவஞானப் பிரகாச வெண்பா)*

இவ்வாறு புறத்தே கோயில் கொண்டு விளங்கும் பெருமான் பக்தியுடன் வழிபடும் அடியார்களின் உள்ளத்தையும் கோயிலாகக் கொண்டு அருள் செய்கிறான்.

*"காலையும் மாலையும் கைதொழுவார் மனம் ஆலயமாகும்."*

(அப்பர்)

தென்னாடாகிய தமிழ்நாடு மிகுதியான கோயில்களைக் கொண்ட இடமாகும். நாட்டை வளப்படுத்தும் ஆறுகளும், சோலைகளும், வாவிகளும், சாலைகளும் சூழ்ந்து இயற்கைக் காட்சிகளைத் தந்து இன்பம் ஊட்டுகின்றன. வானளாவிய கோபுரங்களும், விமானங்களும், காண்போருக்கு தூரத்தில் இருந்தபடியே தெய்வ உணர்ச்சியைத் தூண்டும் நிலையில்அமைந்துள்ளன. உடலுக்கு உணவைத் தரும் வயல்களில் அமைந்திருப்பது போல, உள்ளத்துக்கும் உணவாகிய பக்தியை உண்டாக்கும் பாங்குடைய கோயில்கள் பல அணிகளாக விளங்குகின்றன. "திருக்கோயில் இல்லாத திருவிலூரும் பாங்கினோடு பலதளிகள் இல்லாவூரும் அவையெல்லாம் ஊரல்ல" என்கிற படிக்கில்லாமல் நாட்டின் பல இடங்களிலும் சைவ, வைணவத் தலங்கள் பல ஆங்காங்கு மிளிர்கின்றன. இவ்வகையில் தென்னாடு தெய்வ மனங்கமழும் திருநாடாகத் திகழ்கிறது.

*"நோக்கிய இடங்களெல்லாம் நுவலருந் தலங்களாக
தேக்கிய தீர்த்தமாக சிவலிங்க மூர்த்தியாக
ஆக்கிய தவத்தினாலும் அடைந்தவர்க்கற மென்றோதும்
பாக்கிய மாக்கிமே லுய்ப்பதுமுது சென்னிநாடு"*

*(மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை)*

மேலும் நமது முன்னோர்களின் நாகரீக வாழ்வுக்கு எடுத்துக்காட்டாக விளங்குவன முன்னோர்கள் எடுப்பித்த திருக்கோயில்களாகும். இவைகள் பக்தியை உண்டாக்கும் இடங்களாவதன்றி பெருஞ்சிற்பங்கள் நிறைந்த பெட்டகங்களாகும். மின்சார அணுக்கள் நிறைந்த இடம் (Power House) போலத் திருவருள்

அணுக்கள் நிறைந்த சிறப்பிடங்கள் ஆகும். எழுத்தின் ஒலி வடிவை உணர்த்துவதற்கு வரி வடிவெழுத்து அமைந்தது போல கட்புலனால் காண முடியாத கடவுளைக் காட்டும் சாதனங்களாகக் கோயில்கள் விளங்குகின்றன. இவைகளை நம் முன்னோர்கள் தம் உயிரினும் மேலாகப் பாதுகாத்துப் பின் வழியினராகிய நமக்கு அருஞ்செல்வங்களாக வைத்துச் சென்றார்கள். நாட்டின் நலத்துக்கும் மக்களின் நல்வாழ்வுக்கும் கோயில்கள் இன்றியமையாதன. வாழ்க்கைக் கடலில் அகப்பட்டுத் துன்புறும் மக்களுக்கும் கோயில்கள் கலங்கரை விளக்கங்களாக (Light House) விளங்குகின்றன. ''கோயில் விளங்கக் குடி விளங்கும் "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பவை ஆன்றோர் கூறிய அனுபவ மொழிகளாகும்.

ஆதலின் பெறுவதற்கு அருமையான மனிதப் பிறவியை பெற்றவர் அனைவரும் கோயில்களில் குடி கொண்ட பசுபதியாகிய பரமனை அன்பினால் வழிபட்டு அவ்வன் வகுத்த நன்னெறியில் சென்று அவனருளைப் பெற முயலுதல் சிறந்த கடமையாகும். ''மானுடப்பிறவிதான் வகுத்தது மனவாக் காயத்து ஆனிடத்தைந்தும் ஆடும் அரன் பணிக்காக அன்றோ'' என்று ஆன்றோரும் கூறியுள்ளார். ''உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம் உடம்பில் உத்தமனைக் காண்'' என்று ஔவையாரும் பகர்ந்துள்ளார்.

## 2. கோயிலும், இருப்பிடமும்

தென்னாடாகிய தமிழ்நாட்டில் இறைவன் உறையும் கோயில்கள் பல. அவை சிவன் கோயில்கள், முருகன் கோயில்கள், திருமால் கோயில்கள், அம்மன் கோயில்கள் முதலியன. இவைகளில் அந்தந்தச் சமயத் தலைவர்களால் தேவாரப் பதிகம் பாடப் பெற்ற தலங்களும், பெயர் மட்டும் குறிக்கப் பெற்ற வைப்புத்தலங்களும், தல புராணங்களைக் கொண்ட கோயில்களும், தனிப்பாடல் பெற்ற தலங்ளும் பிற்காலத்தில் பக்தர்களால் அமைக்கப் பெற்ற அபிமானத் தலங்களும் அடங்கியுள்ளன. இவைகளில் தேவாரப் பாடல் பெற்ற **274** தலங்களில் கொங்கு நாட்டில் உள்ள **7** தலங்களில் திருபாண்டிக் கொடுமுடி என்னும் தலம் **6** வது தலமாக விளங்குகிறது. இத்தலத்தைக் குறித்து தேவார ஆசிரியர்கள், மூவரும் பாடியுள்ளார்கள்.

ஈரோடு மாவட்டம், ஈரோடு வட்டம், ஈரோடு திருச்சி இரயில் மார்க்கத்தில் கொடுமுடி இரயில் நிலையத்திலிருந்து ஒரு பர்லாங் தூரத்தில் காவிரி நதியின் மேற் கரையில் திருப்பாண்டிக் கொடுமுடி என்னும் தலம் உள்ளது. ஈரோட்டிலிருந்து 40 கி.மீ. தொலைவிலும், கரூரிலிருந்து 24 கி.மீ. தொலைவிலும் உள்ளது. கோவிலுக்கு எதிரில் காவிரி நதி தென்கிழக்கில் ஓடுகிறது. காவிரி நதியைக் கடக்க பரிசல்களும் உண்டு.

கொங்கு நாட்டுக்குரிய ஏழு தலங்களில் கொடுமுடி ஒன்று. மேல்கரையரைய நாட்டில் உள்ளது. மற்றவை கரூவூரா நிலை (கரூர்), வெஞ்சமாங்கூடல், திருநணா (பவானி), அவிநாசி, திருமுருகன்பூண்டி, திருக்கொடிமாடச் செங்குன்றூர் (திருச்செங்கோடு) என்பன. இவைகளைக் குறித்த பழைய பாடல் வருமாறு.

*"ஆதி கரூவூர் அதிவெஞ்ச மாக்கூடல்*
*நீதிமிகு கறைசை நீள்நணா – மேதினியில்*
*நாதன் அவிநாசி நன்முருகன் பூண்டித்திருச்*
*சோதிச்செங் கோடெனவே சொல்"*

(பழம் பாடல்)

(இதில் கறைசை என்பது கொடுமுடியைக் குறிக்கும்)

## வேறு பெயர்கள்

கொடுமுடியாகிய இத்தலத்திற்கு பிரமன் வழிபட்டதால் பிரமபுரி என்றும், திருமால் பூசித்ததால் அரிகரபுரம் என்றும், கருடன் பூசித்து தேவலோகம் சென்று அமுதம் கொண்டு வந்ததால் அமுதபுரி என்றும், கன்மாடன் என்னும் வேதியன் வழிபட்டு வயிற்றிலுள்ள களங்கம் நீங்கப் பெற்றதால் கன்மாடபுரம், கறையூர், கறைசை என்றும், மலையத்துவச பாண்டியன் இத்தலத்தில் திருப்பணி செய்து நகரமைத்து விழாச் செய்து சிறப்புச் செய்ததால் திருப்பாண்டிக் கொடுமுடி என்றும், ஓர் பாண்டிய மன்னனுடைய பிள்ளையின் குறையுறுப்பு (பெரு விரல்) நிறையப் பெற்றதால் அங்கவருத்தனபுரம் என்றும், பாண்டு மன்னனின் பெருநோய் நீங்கப் பெற்றதால் பாண்டு நகரம் என்றும், பரத்துவாசருக்கு நடனக்காட்சி அளித்ததால் பரத்துவாச சேத்திரம் என்றும் பெயர்கள் ஏற்பட்டன. மேரு மலையின் ஒரு துண்டு வைரமணியாக இவ்விடத்தில் வீழ்ந்து பெருஞ் சிகரமாகவும், அதுவே மூலலிங்கமாகவும் அமைந்ததால் கொடுமுடி

தென்கைலாயம் என்ற பெயர்கள் அமைந்தன என்பர். கல்வெட்டுக்களில் அதிராஜராஜ மண்டலத்துக் காவிரி நாட்டுக் கறையூர்த் திருப்பாண்டிக் கொடுமுடி என்று கூறப்பட்டுள்ளது.

இவ்வூரில் பஞ்சாயத்து முறையில் ஆட்சி நடைபெறுகிறது. ஊரில் தபால் தந்தி நிலையம், ஊராட்சி ஒன்றியம், பத்திரப்பதிவு நிலையம் முதலிய அலுவலகங்கள் உள்ளன. மேலும் அரசு மருத்துவ நிலையம், பெருநோய் மருத்துவ நிலையம், திரு. சங்கரர் ஆண்கள் மேல் நிலைப்பள்ளி, திரு. சங்கரர் மகளிர் உயர்நிலைப்பள்ளி, தொடக்க நிலைப்பள்ளிகள், கூட்டுறவு வங்கி, கத்தோலிக் சிரியன் வங்கி, ஐசிஐசிஐ வங்கி, ஈரோடு சென்டரல் கோ - ஆப்ரெட்டிவ் வங்கி, பாரத ஸ்டேட் வங்கி முதலியனவும், காவல் நிலையமும், பேருந்து நிலையமும் உள்ளன. இவ்வூர் கடல் மட்டத்துக்கு (Sea Level) 428 அடி உயரத்தில் உள்ளது. இவ் ஊருக்குப் பக்கத்திலுள்ள சாலைப்புதூரில் திங்கட்கிழமைதோறும் சந்தை கூடுகிறது. இவ்வூரில் மலையம்மன் கோயிலும், புதுமாரியம்மன் கோயிலும், ஐயனார் கோயிலும், பகவதியம்மன் கோயிலும் தனித்தனியே உள்ளன. மலையம்மன் கோயில் மிகவும் பழமையானது. தல புராணத்தில் வாலாம்பிகை என்னும் பெயரால் போற்றப்பட்டுள்ளது. இந்த அம்மனுக்கு கோபம் மிகுந்திருந்ததால் சிங்க வாகனத்தை மாற்றி நந்தியை அமைத்துள்ளார்கள்.

## 3. கோயிலின் அமைப்பு

கோயில் காவிரி நதியின் மேல்கரையில் கிழக்கு நோக்கி உள்ளது. முன்னே சுவாமி, அம்மன், பெருமாள் சந்நிதிகளுக்குரிய மூன்று கோபுரங்கள் உள்ளன. கோயிலின் உட்புறம் வடக்கில் சுவாமி சந்நிதியும், தெற்கில் அம்மன் சந்நிதியும், நடுவில் பின்புறத்தில் பள்ளி கொண்ட பெருமாள் சந்நிதியும், தென்மேற்கு மூலையில் அனுமார் சந்நிதியும், பெருமாள் கோயிலுக்கு தெற்கில் திருமங்கை நாச்சியார் சந்நிதியும், முன்னே வன்னி மரமும், பிரமன் சந்நிதியும் ஆங்காங்கு உள்ளன.

சுவாமி கோயிலில் கோபுரத்துக்கு உள்பாகத்தில் சூரியன், சந்திரன் இருபக்கத்திலும் உள்ளனர். பக்கத்தில் நவக்கிரகங்கள், பைரவர், சனீஸ்வரர் சந்நிதிகள் உள்ளன. கோயிலுக்கு நடுவில் மூலவரும், உள் சுற்றுப் பிரகாரத்தில் தெற்கில் அறுபத்துமூவரும், மேற்கில் விநாயகர், உமாமகேசுவரர், அகத்தீசுவரர், கஜலட்சுமி, ஆறுமுகப் பெருமாள் (தேவிகளுடன்) முதலியோரும், வடக்கில் நடராஜர், நால்வர் ஆகியோரும் காட்சி தருகின்றனர். சீட்டு விற்கும் இடம் சந்நிதிக்குள்

செல்லும் வழியில் தெற்கே உள்ளது.

பெருமாள் கோயிலில் உள்ளே இருபுறமும் பன்னிரு ஆழ்வார்களும், பரமபதநாதர், உடையவர், வெங்கடாசலபதி, கருடன் முதலியோர்களும் எழுந்தருளியுள்ளார்கள். நடுவில் மூலவர் பெருமான் பள்ளி கொண்ட கோலத்தில் காட்சி தருகிறார். இத்தலத்துக்குரிய மரம் வன்னி மரம். தனிச்சிறப்புடையது. பிரமனின் அடையாளமாய்ப் போற்றப்படுகிறது. முன்னே பிரமனுடைய சிலையும் வைக்கப்பட்டுள்ளது. மற்ற இடங்களில் காணப்படுவது போல் இந்த வன்னி மரத்தில் நீண்ட முள், பூ, காய் முதலியன இல்லை. தென்மேற்கு மூலையில் அனுமார் பெரிய உருவத்தில் காட்சி தருகிறார். கோயிலுக்கு எதிரில் காவிரிக் கரையில் சக்தி விநாயகர் காட்சி தருகிறார். முன்னே இவரைத் தரிசித்துதான் பிறகு கோவிலுக்குள் செல்ல வேண்டும். நேரடி பேருந்து வசதி உண்டு.

கொடுமுடியிலிருந்து திருச்சி, தஞ்சாவூர், புதுக்கோட்டை, மதுரை, கன்னியாகுமரி, திருச்செந்தூர், இராமேஸ்வரம், கோயம்புத்தூர், ஈரோடு, தாராபுரம், காங்கயம், வெள்ளகோவில், சென்னிமலை, சேலம், பழனி, பள்ளபட்டி, ஆகிய முக்கிய ஊர்களுக்குச் செல்ல நேரடி பேருந்து வசதி உண்டு.

# 4. கோயிலும், கோயிலைச் சார்ந்த இடமும் வரைபடம்




கொடுமுடி கிராமம் சர்வே எண் 322 ஹெ. 0.82.0

1. சக்தி விநாயகர்
2. சுவாமி கோபுர வாயில்
3. பெருமாள் கோபுர வாயில்
4. அம்மன் கோபுர வாயில்
5. மகுடேசுவரர் முன் மண்டபம்
6. சூரியன்
7. சந்திரன்
8. நவக்கிரகங்கள்
9. பரத்துவாசர் தீர்த்தம்
10. பைரவர்
11. சனீசுவரர்
12. சீட்டு விற்கும் அலுவலகம்
13. சுவாமி கோயில் வாயில்
14. மூலவர். மகுடேசுவரர்
15. அறுபத்துமூன்று நாயன்மார்கள்
16. தட்சிணா மூர்த்தி
17. காவிரி கண்ட விநாயகர்
18. உமா மகேசுவரர்
19. அகத்தீசுவரர்
20. கஜலட்சுமி
21. ஆறுமுகர் (தேவிகளுடன்)
22. சண்டேசுவரர்
23. சபாபதி
24. உற்சவ மூர்த்திகள்
25. அம்மன் கோயில் முன் மண்டபம்
26. அம்மன் கோயில் வாயில்
27. அம்மன் வடிவுடை நாயகி
28. வல்லபை கணபதி
    சோழீச்சுரர்
    விசுவேசர்
    காசி விசுவநாதர்
    விசாலாட்சி
    சரசுவதி
    சப்த கன்னிகள்
29. அம்மன் பள்ளியறை
30. மடப்பள்ளிகள்
31. திருக்கோயில் அலுவலகம்
32. தேவ தீர்த்தம்
33. பிரம்மன் ஆலயம்
34. அனுமார் சந்நிதி
35. திருமங்கை நாச்சியார்
36. வீரநாராயணப் பெருமாள் கோயில் வாயில்
37. பள்ளி கொண்ட பெருமாள்
38. ஆழ்வார்கள்
39. சொர்க்க வாயில்
40. சத்திரம், நந்தவனம்
41. பிரம்ம தீர்த்தம்

# 5. மூர்த்திகளின் பெயர்கள்

இத்தலத்து விநாயகர் காவிரி கண்ட விநாயகர் எனப்படுவர். மூலவர் சுயம்பு மூர்த்தி. தானே அமைந்தது. பெருமானுக்கு கொடுமுடி நாதர், மலைக்கொழுந்தர், மகுடேசுவரர், மகுடலிங்கர், கொடுமுடீசுவரர், கொடுமுடி லிங்கர் முதலிய பெயர்கள் வழங்குகின்றன. கல்வெட்டுக்களில் திருப்பாண்டிக் கொடுமுடி மகாதேவர், ஆளுடைய நாயனார் என்னும் பெயர்கள் கூறப்படுகின்றன. தேவியாருக்குச் சௌந்திராம்பிகை, வடிவுடை நாயகி, பண்மொழியம்மை என்னும் பெயர்கள் வழங்குகின்றன. பள்ளி கொண்ட பெருமாளுக்கு வீரநாராயணப்பெருமாள் என்பது கலியுகப் பெயர் கிரேதா யுகத்தில் ஆதிநாராயணர் என்றும், திரேதா யுகத்தில் அநந்த நாராயணர் என்றும், துவாபர யுகத்தில் வேதநாராயணர் என்றும் பெயர்கள் வழங்கப்பட்டனவாம். இவருக்குப் பரிவாரங்களாக நாபிக்கமல நான்முகன், நாரதர், பரவாசுதேவர், விபீடணன், ஆஞ்சநேயர், கவேர முனிவர், அகத்தியர் ஆகியோர் சுற்றிலும் எழுந்தருளியுள்ளார்கள். தேவியாருக்கு திருமங்கை நாச்சியார், மகாலட்சுமி என்னும் பெயர்கள் வழங்குகின்றன. தலத்திற்குரிய மரம் வன்னி பிரமனின் அம்சமாக உள்ளது.

# 6. தீர்த்தங்கள்

## 1. காவிரி

கோயிலுக்கு எதிரில் தென்கிழக்கில் காவிரி ஓடுகிறது, இந்த ஆறு சோழ நாட்டை வளப்படுத்துகிறது. அகத்தியரின் கமண்டலத்து நீரை விநாயகர் காக்கை உருவங் கொண்டு கவிழ்த்ததால் இப்பெயர் பெற்றது.

*"தாங்கு செஞ்சடைக் கடவுளும் துளவனும் சார்ந்து*
*நீங்கு தற்கரும் பொன்னியின் நீத்தம் எஞ்ஞான்றும்*
*பாங்கர் அமைந்த பாண்டிக் கொடுமுடி"*

(தல புராணம்)

ஒப்பில்லாத இறைவன் அருவம், அருவுருவம், உருவம் என்னும் பல நிலைகளில் வந்து அடியார்களுக்கு அருள் செய்வது போலக் காவிரி நதியும் கால்வாய், ஓடை, ஏரி, வயல், குளம் முதலியவைகளில் கலந்து வெவ்வேறு பெயர்களுடன் உலகத்தார்க்கு உதவுகிறது. இதைக் குறித்த

பாடல் :

*"அருவநான் குருவநான்கோர் அருவுரு இவைஒன் பானும்*
*பொருவிலி கலந்துவேறு வேறுபேர் புனைந்தாற் போல*
*மருவு காலோடை ஏரிவயல் குளம்பலவும் பொன்னிப்*
*பருவநீர் கலந்துவேறு வேறுபேர் படைத்த தம்மா"*

(தியாகராச லீலை - மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை)

காவிரி நதிக்குக் கவேர நதி, காக நதி, பொன்னி, தென்கங்கை முதலிய பெயர்களும் வழங்கும். "கங்கையிற் புனிதமாய் காவிரி" என்று ஓர் ஆழ்வார் பாடுகிறார்.

## 2. தேவ தீர்த்தம்

வன்னி மரத்திற்கு அருகில் உள்ளது. காவிரியிலும், தேவ தீர்த்தத்திலும் படிந்து வன்னியையும், ஈசனையும், திருமாலையும் சுற்றி வந்து வழிபட்டால் பிரமகத்தி முதலிய குற்றங்கள் நீங்கும், உடற்பிணி, பேய், பிசாசு, பைத்தியம் முதலிய பிணி தீராத நோய்கள் தீர்ந்து சுகம் அடைவர்.

*"முன்னு ரைத்த தேவதீர்த் தந்தனில் மூழ்கி*
*வன்னி யைக்கொடு முடிமகே சனைமலர் துளவோன்*
*தன்னை யோர்பிர தக்கிணம் புரிந்துதாழ்ந் திறைஞ்சில்*
*பின்னு ரைப்பதென் தீர்ந்திடும் பிரமகத் தியுமே"*

(தல புராணம்)

## 3. பரத்துவாச தீர்த்தம்

இத் தீர்த்தம் நவகிரகத்துக்கு அருகில் உள்ளது.

## 4. பிரம தீர்த்தம்

பிரமன் பெயரால் ஏற்பட்டது. மடப்பள்ளிக்கு அருகில் உள்ளது. இவையல்லாமல் இத்தலத்தில் வேறு பல நீர் நிலைகளும் உள்ளன. தீர்த்தங்கள் யாவும் நல்ல குடிநீரையுடையது.

*"அத்தன் இறைவன் அமலேசன்*
*அமரா லயத்தின் அருகுறுநீர்*
*சுத்தம் சுத்த மாயினும்நற்*
*சுரர்கள் பரவுகங்கை என்றே*

*புத்தி புரிந்தங்கத் தடத்தின்*
*புனலுள் படிவோர் யாரேனும்*
*சத்த சன்னத் துறுபாவம்*
*தணிந்து சிறந்து தயங்குவரே"*

(சிவபுண்ணியத் தெளிவு)

# 7. தலப் பெருமைகள்

இத்தலம் பல பெருமைகளையுடையது. தேவாரப் பாடல் பெற்ற 274 தலங்களுள் ஒன்று. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் பாடிய தேவாரமும் அமைந்தது. கொங்கு நாட்டுத் தலங்கள் ஏழில் ஒன்று. மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றிலும் சிறப்பு உடையது. மலையத்துவச பாண்டியனால் அமைக்கப் பெற்றது. பல பெயர்களை உடையது. பிரமன், திருமால், சிவபிரான் ஆகிய மும்மூர்த்திகளும் எழுந்தருளிய கோயில் பிரமனும், திருமாலும் மகுடேசுவரரின் திருமணக் கோலத்தைத் தரிசிக்க வந்து அமர்ந்தனர். சுவாமி, திருமால், அம்மையார் மூவருக்கும் தனித்தனியே மூன்று கோபுரங்கள் அமைந்தது ஓர் தனிச் சிறப்பு. சைவ, வைணவ சமநோக்கு நிலையில் வழிபடுங் கோயில். மூர்த்திகள் புறப்பாட்டில் சிவனும் திருமாலும் சேர்ந்து காட்சி தருவர். சிவனையும், திருமாலையும் ஒன்றுபடுத்திக் கூறும் பாடல்

*"பொன்திகழு மேனிப் புரிசடையும் புண்ணியனும்*
*நின்றுலகந் தாய நெடுமாலும் - என்றும்*
*இருவரங் கத்தால் திரிவரே லும்ஒருவன்*
*ஒருவனங்கத் தென்றும் உளன்."*

(பொய்கை ஆழ்வார்)

பிரமதேவரின் அடையாளமாக வன்னிமரம் அமைந்து உள்ளது. ஆவணி, பங்குனி மாதங்களில் நான்கு நாட்கள் சூரியனின் கதிர்கள் சுவாமி, அம்மன் திருவுருவங்களில் படுகின்றன. இது சூரிய பூஜை எனப்படும். மேலும் இத்தலத்தில் உமாதேவி, பிரமன், திருமால், தேவர்கள், அகத்தியர், பரத்துவாசர், பாண்டியன், கன்மாடன், பாண்டு, கருடன் முதலியோர் பூசித்து பேறு பெற்றுள்ளார்கள். அல்லாமல் கொங்கு மாதவர்கள் கூடியிருப்பது, சித்தியெல்லாம் தருவது. காவிரியின் மேல் கரையில் உள்ளது. பல தீர்த்தங்களை உடையது. தரிசித்த மாத்திரத்தில் பிறவியைப் போக்கி முக்தியைப் தருவது. சுயம்பு மூர்த்தியாகிய மகுடலிங்கர் கோயில் கொண்டிருப்பது.

தேவாரம் பாடிய மூவரில் திருஞானசம்பந்தர் இத்தலப் பதிகத்தில் காவிரியின் வளத்தை வர்ணித்துக் காட்டுகிறார். "காணமர் மஞ்ஞைகள் ஆலும் காவிரிக் கோலக்கரை" என்றும் "மருமலி மென்மலர்ச் சந்து வந்திழி காவிரி மாடே " என்றும் காட்டுகிறார். சான்றோர் வழிபடுவதை,

*"சித்தரும் தேவரும் கூடிச் செழுமலர் நல்லன கொண்டு*
*பத்தர்கள் தாம்பணிந் தேத்தும் பாண்டிக் கொடுமுடியாரே"*

என்று கூறுகிறார். பெருமானுடைய தோற்றப் பொலிவையும், இயல்புகளையும் "சடையமர் கொன்றையினாரும்" என்ற பாடலில் காட்டுகிறார். திருநாவுக்கரசர் இத்தலத்தின் பெருமைகளைத் தம் பாடலில்.

*"திருக்கொடுமுடி என்றலும் தீவினைகருக் கெடும்*
*இதுகை கண்ட யோகமே"*

என்றும். "திருப்பாண்டிக் கொடுமுடி நட்டனைத் தொழ நம்வினை நாசமே" என்றும் கூறுகின்றார். சுந்தரர் ஒவ்வொரு பாடலிலும் ஐந்தெழுத்தாகிய "நமச்சிவாய " மந்திரத்தைத்தான் மறந்தாலும் நா மறவாமல் சொல்லும் என்று பாடுகின்றார். உனை நான் மறக்கினு சொல்லு நா நமச் சிவாயவே என்பது அவருடைய ஒவ்வொரு பாடலிலும் பயின்று வரும் அடியாகும்.

இறைவனை நற்றவா, நட்டவா, நாவலா, வல்லவா, நஞ்சனி கண்ட சேடனே, விரும்பனே, நம்பனே, காரணா என்று பல பெயர்களால் அழைக்கின்றனர். பஞ்சாட்சர மந்திரம் எல்லா வகை நலன்களையும் கொடுக்கும் என்பதை திருஅருள் பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் ஒரு பாடலில் காட்டுகிறார்.

*"பாடற் கினிய வாக்களிக்கும்*
*பாலுஞ் சோறும் பரிந்தளிக்கும்*
*கூடற் கினிய அடியவர்தம்*
*கூட்ட மளிக்கும் குணமளிக்கும்*
*ஆடற் கினிய நெஞ்சேநீ*
*அஞ்சே லென்மேல் ஆணைகண்டாய்*

*தேடற் கினிய சீரளிக்கும்*
*சிவாய நம என்றிடுநீரே"*

(திருவருட்பா)

*"நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க*
*இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க"*

(திருவாசகம்)

மற்றுமுள்ள பெருமைகளைத் தலபுராணத்திலுள்ள ஒரு பாடலிற் காணலாம்.

*"மற்று ரைப்பதென் அத்தலத் துதித்த மானுடரும்*
*ஒற்றை புண்மிரு கம்புழுப் பன்மரம் புறவும்*
*சொற்றி டற்கருஞ் சுவர்க்கமும் சுராதிபர் உருவும்*
*பெற்றிருக்குமென்றால் அதன்பெருமை யார்புகழ்வார்"*

(தல புராணம்)

# 8. திருப்பணிகள்

முன்னோர்கள் ஏற்படுத்திய கோயில்களுக்கு எவ்விதத் தீங்கும் நேராதபடி பாதுகாத்து அவ்வப்பொழுது ஆவண செய்ய வேண்டும். புதியதோர் கோயிலை அமைப்பதைக் காட்டிலும் பழமையான கோயிலைப் புதுப்பித்தல் மிக்க புண்ணியத்தைத் தரும் என்பர்.

*"புதிதுறப் பணிகள் வேறு புரிவதின் பழைய தொன்றை விதியுளி*
*புதுக்கு வோர்க்கு மிகப்புண் ணியந்தான் எய்தும்"*

என்று ஆன்றோர் ஒருவர் கூறியுள்ளார்.

*"மாதவர் மடங்களாதி வரதன்மந் திரங்களாதி*
*நாதமா மிலிங்கமாதி நளினபுட் கரணியாதி*
*சேதமுற் றிடின்முன்போல் செய்பவர்க் குறுபலன்தான்*
*ஓதுமுன் செய்தோர் தம்மில் ஆயிரம் குணிதமோங்கும்"*

(சிவபுண்ணியத் தெளிவு)

இக்கோயிலைப் பழங்காலத்தில் பாண்டிய மன்னர்கள் திருப்பணிகள் செய்தனர். மலையத்துவச பாண்டியன் முதலில் பல திருப்பணிகளைச் செய்து 16 கிராமங்களையும், சில ஊர்களையும் தேவதானமாகக் கொடுத்துள்ளான்.

கோமாறவர்மன் என்பவன் சில திருப்பணிகளுக்கும், திருவாதிரைத் திருமஞ்சனத்திற்கும் சில பொருள்களை உதவியுள்ளான். தேர்மாறன் என்பவன் 8-ஆம் நூற்றாண்டில் கோயிலுக்குப் பொன்னும் மணிக்குவியலும் வழங்கியுள்ளான். சுந்தரபாண்டிய கேசரிவர்மன் என்பவன் 13-ஆம் நூற்றாண்டில் சிவபெருமானுக்கும், திருமாலுக்கும் பெரிய திருவடியாகிய கருடனுக்கும் சில கிராமங்களைத் தேவதானமாகக் கொடுத்துள்ளான். அறுபத்து மூன்று அடியார்களுள் ஒருவரான நரசிங்கமுனையரையர் என்பவர் சில திருப்பணிகளைச் செய்துள்ளதாகச் சொல்லப்படுகிறது. சிங்க முகம் அமைக்கப்பட்ட 2 கல் தூண்கள் கோயிலில் உள்ளன. (இவை நரசிம்ம பல்லவனைக் குறித்த அடையாளமாயிருக்கலாம் எனக் கருதப்படுகிறது.)

தண்டிகைக் காளியண்ணன் என்பவன் 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். நாட்டிமைக் காளியண்ணன் என்றும், விக்கிரமாதித்த காளியண்ணன் என்றும் சொல்லப்படுவான். தலையநல்லூரில் வாழ்ந்து

வந்தவன். இவன் கொடுமுடி லிங்கருக்கு அபிஷேகம், நித்தியப்படித்தரம், நந்தாவிளக்கு முதலியவைகளுக்கு கட்டளைகள் ஏற்படுத்தியதுடன் சோலை முதலியவைகளையும் அமைத்துள்ளான். பாண்டிய மன்னர்கள் மேல் கரையரைய நாட்டிலுள்ள 16 கிராமங்களில் 8 கிராமங்களை மகுடலிங்கருக்குத் தேவதானம் விட்டு 8 கிராமங்களை நாட்டுத் தலைவர்களின் ஆட்சிக்குட்படுத்தி வைத்தார்கள். இது "நாடெட்டுத் தானமெட்டு" என்று வழங்குகிறது.

பிற்காலத்தில் 1909-ஆம் ஆண்டு, 1922-ஆம் ஆண்டு நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் திருப்பணிகள் செய்யப்பட்டு 16-4-1909 லும், 1922 -ஆம் ஆண்டிலும் குடமுழுக்கு நடைபெற்றன. கோயில் திருப்பணி செய்த நகரத்தார்கள் தேவகோட்டை ஜமீன்தார் அழ.அரு. குடும்பத்தினரும், கானாடு காத்தான் சா.அ. குடும்பத்தாரும், க.வெ. குடும்பத்தாரும் ஆவார்கள். 1974-ஆம் ஆண்டு திரு.கே.ஆர். பாலசுப்பிரணியம் அவர்கள் தலைமையில் கோயில் திருப்பணி செய்து 1-7-74 ஆம் நாள் குடமுழுக்கு விழா நடைபெற்றது.பின்னர் சட்டமன்ற உறுப்பினர் திருமதி கவிநிலவு தர்மராஜ் அவர்கள் தலைமையிலும், அதன் பின்னர் சட்டமன்ற உறுப்பினர் திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன் அவர்கள் தலைமையிலும் திருப்பணிக்குழுக்கள் அமைத்து பல்வேறு திருப்பணிகள் நிறைவேற்றப்பட்டு 25-8-1999 அன்று குடமுழுக்கு நடைபெற்றுள்ளது.

## 9. சிற்பங்கள்

கோயிலில் இயற்கையும், செயற்கையுமாகிய சிற்பங்கள் அமைந்துள்ளன. மூலலிங்கம் சுயம்புச் சிற்பம் கோயிலே சிற்பக் கோயில். எல்லா மூர்த்திகளும் ஒருங்கே அமைக்கப் பெற்ற இடம். முன்னுள்ள மூன்று கோபுரங்களும் அழகிய சிற்பங்கள் பொருந்தியவை. கோயிலிலுள்ள மண்டபங்களும், தூண் வரிசைகளும் கவர்ச்சிகரமாய் உள்ளன. மூர்த்திகளின் சிலைகளும், உற்சவ விக்கிரகங்களும் மிகவும் பெரியவை. சில உற்சவச் சிலைகள் பூமியில் கண்டெடுக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளன. ஆஞ்சநேயரின் சிலையும் பெரியதாய் உள்ளது. எனவே, கோயிலும் மூர்த்திகளும் நல்ல சிற்பங்கள் அமைந்து தெய்வீகத் தன்மையைக் காட்டுகின்றன.

# 10. கல்வெட்டுக்கள்

இக்கோயிலுக்குரிய கல்வெட்டுக்கள் பெருமாள் கோயிலும், வெளியிடங்களிலும், செப்பேட்டிலும் உள்ளன. சில அழிந்து விட்டன. முக்கியமான கல்வெட்டொன்று வீரநாராயணப் பெருமாள் கோயிலிலுள்ளது. சுந்தரபாண்டியன் காலத்தில் ஏற்பட்டது.

## சுந்தரபாண்டிய கேசரிவர்மன் (கி.பி. 1200 - 1250)

இவன் மகர துவச மதுகுலதீப திரிபுவன சக்கரவர்த்தி என்று பெயர் பெற்றவன். திருமாலிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவன். இவனுக்கு முன் ஆண்ட பாண்டிய மன்னர்களால் மகுடலிங்கருக்குத் தேவதானமாக விடப் பெற்ற பத்து கிராமங்களில் சிலவற்றை நீக்கியும், வேறு சிலவற்றைச் சேர்த்தும் பாண்டிக் கொடுமுடி சிவபெருமானுக்கும், திருமாலுக்கும், பெரிய திருவடிக்கும் (கருடன்) இறையிலி தேவதானமாக வழங்கியிருக்கிறான். இவன் காலத்தில் மாசிமகத் திருவிழா இத் தலத்தில் நடந்து வந்ததாகத் தெரிகிறது.

## சுந்தர பாண்டியன் கல்வெட்டு

*1. "ஸ்வஸ்ஸித ஸ்ரீ மகா மண்டலேசரான ரிமபமாலகா பாலமக - மகாதுவச - மதிகுலதீப - திரிபுவனச் சக்ரவர்த்திகளாகிய கொவந் - சுந்தரபாண்டிய கேசரிவன்மரான தேவர்க்கு யாண்டு இரண்டாவது மாசி மாதம் 14-ஆம் தேதி ஆதித்த வாரமும், சித்த நாமயோகமும், பாச வர்க்கணமும் கூடி இந்நாளில் சொகுண கமலதிரிபுவன மகா தேவ தேவோத்தமன் - செம்புத் தீவில் திராவிட தேசத்தில் தெட்சண கைலாசத்தில் - யெமாகிய மேல்கரையரைய நாட்டில் தடமலர் நற்காவிரி சூழ்ந்த திருப்பாண்டிக் கொடுமுடியாளுடைய நன்னாயனாற்கும் பெரிய திருவடி நாயனாற்கும் இறையிலி தேவதானமாக உதகம் பண்ணிக் கொடுத்த ஊராவது :-*

*கறையூர் விதிரித் திருச்சிற்றம்பல நல்லூர் நன்னாயனார் திருவிடையாட்ட எழுநூற்றுப்பெதி மங்கலம் திரு ஊஞ்சலூர், வள்ளிபுரம், வடிவுடைமங்கையும்,ஐநகர் - திருக்காடுதுறையும்- நாயனார்-திருப்பாண்டிக் கொடுமுடி ஆளுடையார்க்கும் பெரிய திருவடியாகி நன்னாயனார்க்கும் மாசிமகத் திருவிழா எழுந்தருளவும், தபனமாடியருளவும், சற்கால நிபந்தங்களுக்குப் பெருந்திருவமுது செய்தருளவும், சாத்துப்படி திருவாராதனமும் திருப்பணிகளும் குறைவற நடத்திப் போந்தருளவும், இதுக் குடலாயெப்பயப் பட்டங்களுக்கும்,ஸ்ரீ*

சுந்தரத் திருப்பாண்டிக் கொடுமுடி மகாதேவர்க்கு மிவ்வூர்கள் உதகம் பண்ணிக் கொடுத்தோம். இவ்வூர்கள் எல்லாவற்றிற்கும் திரிசூல தாபனம் சக்கர தாபனக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்வதாகவும். '

உ. கோமாறவர்மன் :- கி.பி 128-ல் வாழ்ந்த பாண்டிய மன்னன். இவன் கோயில் திருப்பணிகளுக்கும், திருவாதிரைத் திருமஞ்சனத்திற்கும் சில பொருள்களை உதவியுள்ளான். இச்செய்தி புகலூரான் வாய்க்கால்கரை நந்தவனக் கட்டிடத்திலுள்ள சிதைந்து போன கோயில்களிலுள்ள கல்வெட்டால் தெரியவருகிறது.

௩. தேர்மாறன் :- என்னும் பாண்டிய மன்னன் (கி.பி. 710-765)

*"மழக்கொங்கம் அடிப்படுத்திப் பாண்டிக் கொடுமுடி சென்றெய்திப்*
*பசுபதியது பத்மபாதம் பணிந்தேத்திக் கனக ராசியும்*
*கதிர்மணிக் குவியலும் குடுத்திட்டுக் கொங்கர் நறுங்*
*கண்ணிக் கங்கரா சனோடு சம்பந்தஞ் செய்தான்"*

என்று வேள்விக் குறிச் செப்பேட்டில் குறிக்கப் பெற்று உள்ளது.

4. தண்டிகைக் காளியண்ணன் :- இவன் 17-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன். இவன் நாட்டிமைக் காளியண்ணன், விக்கிரமாத்திதக் காளியண்ணன் என்றும் பேசப்படுகிறன்றான். இவன் மதுரை திருமலை நாயக்கர் காலத்தில் மேல்கரையை நாட்டில் அதிகாரம் புரிந்தவன். கூரை குலத்தினன். தலையநல்லூரில் வாழ்ந்தவன். இவன் கொடுமுடி லிங்கருக்கு அபிஷேகம், நித்தியப்படித்தரம், நந்தா விளக்கு ஆகிய கட்டளைகள் நடத்தி வந்ததன்றி நந்தவனம், சோலை முதலியவைகளையும் அமைத்துள்ளான்.

*"செப்பு மரைய நன்னாட்டினில் நாட்டிமை*
*செய்கூரை குலத்தினன் காளியணன் றன்மம்*
*அப்பணி வேணிக் கொடுமுடி லிங்கருக்கு*
*அபிடேக நித்தியப் படித்தரக் கட்டளை*
*ஒப்பரிய நந்தா தீபத்தின் கட்டளை*
*ஓங்குநந்த வனந் தேங்கமழ் சோலையும்*
*மெய்ப்புடன் வாழும் தலைசைச் சிவகிரி*
*வேலவர் பூசனைக் கட்டளைப் பத்தெலாம்"*

*(கொடுமுடிக் குறவஞ்சி)*

**5. நாடெட்டுத் தானமெட்டு :-** பாண்டிய மன்னர்கள் மேல் கரையரைய நாட்டிற்குரிய 16 கிராமங்களில் 8 கிராமங்களை மகுடலிங்கருக்கு தேவதானம் விட்டு எஞ்சிய 8 கிராமங்களையும் நாட்டுத் தலைவர்களின் ஆட்சிக்குட்படுத்தியிருந்தார்கள். ஆதலால் "நாடெட்டுத் தானமெட்டு" என்று வழங்கியது. இதைக் குறிக்கும் பாடல் ;

*உலகுபுகழ் தலையநல்லூர் வெண்கம் பூருடன்*
*உயர்ச்சிபெறும் அஞ்சூரதும்*
*உசிதமிகு புகழ்குலவு மொஞ்சனூர் கொலங்கோயில்*
*உண்மையுள நயகொந்தளம்*
*நலமிகும் துக்காச்சி கார்வழிக் கிராமம் இரு*
*நான்குமேல் கரையரையநன்*
*நாடதற் குரியவாம் தானக் கிராமமிரு*
*நான்குமகு டேசலிங்கர்*
*தலமெனுங் கறைசையம் பதிவிதர் மிகுநலம்*
*சார்ந்தவெழு நூற்றுமங்கை*
*தங்குமிள வரசநல்லூர் வள்ளிபுர மெழில்*
*தான்கொள்வடி வுள்ளமங்கை*
*நிலைமைபெறும் ஊஞ்சலூர் திருக்காடு துறையென*
*நிகழ்த்துபதி பொன்னிகாஞ்சி*
*நீண்டஅனு மாநதி துலங்கு நன்னீதிகள்*
*நிறைந்துவளர் அறையநாடே*

*(ஓர் பழம் பாடல்)*

**6. நரசிம்ம பல்லவன் :-** இவன் *(கி.பி. 625-650-ல்)* இத்தலத்தில் சில திருப்பணிகள் செய்துள்ளான். இவன் நினைவாக நரசிங்கமும் அமைத்துச் செய்யப்பட்ட இரண்டு கல்தூண்கள் உள்ளன.

கல்வெட்டுக்களால் சுந்தரபாண்டியன், கோனேர் இன்மை, கொண்டான். கொங்குமன்னன், வீரநாராயண இரவிவர்மன் முதலியவர்கள் கோயில் பூசனைகளுக்கும், கட்டளைகளுக்கும் தேவதானமாக நிலங்கள் வழங்கப் பெற்றதும், வேறு மன்னர்களால் திருப்பணிகள் செய்யப் பெற்ற விவரமும், இத்தலத்திற்கு அதிராஜராஜ மண்டலத்துக் காவிரி நாட்டுக் கறையூர்த் திருப்பாண்டிக் கொடுமுடி என்ற பெயர் வழங்கப்பட்டதும், பெருமானுக்குத் திருப்பாண்டிக் கொடுமுடி மகாதேவர், ஆளுடைய நாயனார் என்ற பெயர்கள்

வழங்கப் பெற்றன என்பதும், கோயிலில் பள்ளி கொண்ட பெருமாள், பெரிய திருவடி (கருடன்) முதலியோர் கோயில் கொண்டுள்ள விவரமும் பிற செய்திகளும் தெரிய வருகின்றன.

## 11. தினப் பூஜைகள்

கோயில்களில் பூஜை முதலியன அவ்வப்போது நடைபெற வேண்டும். முட்டுப்பாடு ஏற்பட்டால் நாட்டுக்குத் தீமை உண்டாகும் என்பர்.

*"கண்ணுதற் பெருமான் மேய கோயிலிற் காலந்தோறும்*
*நண்ணுதற் பூசையாதி விதிப்படி நடத்தல் வேண்டும்*
*பண்ணுதல் தவறுமாயின் பார்த்திபன் தனக்கும் பாரில்*
*அண்ணுபல் லுயிர்க்குந்தீமை அணுகுதல் சரதமாமே"*

*(மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை)*

இக்கோயிலில் தினந்தோறும் காலை 7-00 மணிக்கும், உச்சிவேளை 12-00 மணிக்கும், மாலை 6-00 மணிக்கும், இரவு 8-00 மணிக்கும் ஆக நான்கு காலங்களில் அபிஷேக ஆராதனைகள் நடந்து வருகின்றன. பூஜை நேரங்களில் பெரியமணி அடிக்கப்படும். அந்தந்த நேரங்களில் சென்று வழிபடுவதால் மிக்க புண்ணியம் உண்டு.

*"காலைதொழ அற்றவினைக் கட்டகலும் கட்டுச்சி*
*வேளைதொழ இப்பிறப்பில் வெந்துயர்போம் - மாலையினில்*
*வந்துசிவன் தாளை வந்தித்தால் ஏழ்பிறப்பின்*
*வெந்துயர மெல்லாம் விடும்"*

*(சிவதரிசன மகத்துவம்)*

மேலும் பிரதோஷ காலத்தில் சென்று தரிசனம் செய்வது மிகவும் சிறப்பு. பிரதோஷமாவது வளர்பிறையிலும் தேய்பிறையிலும் வரும் திரயோதசி திதிகளில் சூரியன் மறைவதற்கு முன்னுள்ள மூன்றே முக்கால் நாழிகையும் பின்னுள்ள மூன்றே முக்கால் நாழிகையும் கொண்ட காலம் சிவபெருமான் ஆலகாலவிடம் உண்டருளிய காலம் என்பர்.

*"வாழிய இருபக்கத்தும் வளர்திர யோதசிக் கண்*

*ஆழியிற் கதிரோன் வீழும் அதற்குமுன் மூன்றேமுக்கால்*
*நாழிகை பின்னுமந்த நாழிகை இணைய காலம்*
*பாழியங் கடல்சூழ் வைப்போர் பகர் பிரதோடம் என்பர்"*

*(தளியூர்ப் புராணம்- மகா வித்துவான்)*

## திருக்கோயிலில் டிக்கெட் கட்டண விபரம்

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| அர்ச்சனை | - | 2. | 00 |
| சகஸ்ரநாமம் | - | 10. | 00 |
| தட்டு அனுமதி | - | 2. | 00 |
| அபிஷேகம் | - | 25. | 00 |
| காவடி | - | 2. | 00 |
| பால், பன்னீர், இளநீர் | - | 5. | 00 |
| தேங்காய் | - | 1. | 00 |
| சாந்தி | - | 30. | 00 |
| உபய காணிக்கை | - | 2. | 00 |
| திருமண விண்ணப்பம் 1க்கு | - | 10. | 00 |
| கல்யாணம் | - | 150. | 00 |
| முடிகாணிக்கை | - | 10. | 00 |
| மிதியடி | - | 0. | 50 |
| சைக்கிள் | - | 0. | 50 |
| பொருள் பாதுகாப்பு | - | 1. | 00 |
| வெள்ளி நாகாபரணம் சாத்துப்படி | - | 15. | 00 |
| சிறப்பு வழிபாடு | - | 5. | 00 |
| வடைமாலை சாத்துப்படி | - | 5. | 00 |
| எள்ளுக்கிழிக்கட்டு | - | 1. | 50 |

## 12. திருவிழாக்கள்

ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் பெருந்திருவிழா நிகழும், தினந்தோறும் மூர்த்திகள் பல வாகனங்களில் புறப்படும். 10-ஆம் நாள் தேரோட்டம் நடைபெறும். ஆடி 18-ல் பெருந்திரளான மக்கள் காவிரியில் நீராடுவர். மூர்த்திகள் காவிரிக்கு எழுந்தருள்வர். அன்றைக்கு இரவில் பச்சை மண்ணில் தாளி செய்து அதில் மாவிளக்கு, பொட்டு, விளக்கு, காரை, காதோலை, கருமணி, சிற்றாடை, தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு முதலியவைகளை வைத்துக் கொண்டு போய் நடு ஆற்றில் விட்டு வருவர். ஆடி மாதத்தில் அம்மனுக்கும், லட்சுமிக்கும் சந்தனக்காப்பு ஆராதனை நிகழும். புரட்டாசி மாதத்தில் வடிவுடைய நாயகி அம்மனுக்கும், தாயார் திருமங்கை நாச்சியாருக்கும் நவராத்திரி விழா நடைபெறும். ஐப்பசியில் அன்னாபிஷேகம், கந்தசஷ்டி, சூரசம்காரம் நடைபெறும். கார்த்திகையில் தீபம், கடைசி சோமவாரத்தில் சங்காபிஷேகமும் நிகழும். மார்கழியில் திருவாதிரை நாளிலும், ஏகாதசி நாளிலும் நடராஜரும், பெருமாளும் புறப்படும். விடியற்காலையில் திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்கள் ஒலிபரப்பப்படும். தைப்பூச நாளில் தீர்த்த விழா நிகழும். மாசி மாதம் சிவராத்திரி நாளில் இரவில் நான்கு காலங்களிலும் அபிஷேக ஆராதனை நடைபெறும். இது நித்திய சிவராத்திரி, மாத சிவராத்திரி, யோக சிவராத்திரி, பட்ச சிவராத்திரி, மகா சிவராத்திரி என ஐந்து வகைப்படும்.

> *"ஆதியும் அந்தமும் இல்லாதபரம் பொருளான பரமேஸ்வரன்*
> *நள்ளிரவில் தம்மை லிங்கோற்பவ மூர்த்தி ஆக விஸ்வரூபம்*
> *எடுத்துக்காட்டிய நாளே சிவராத்திரியாகும்"*
>
> *(காமகோடி)*

மற்றும் மாதக் கார்த்திகை நாட்களிலும், பிரதோஷ காலங்களிலும் சிறப்பு வழிபாடுகள் நிகழும். இக்கோயிலில் நிகழும் திருவிழாக்களில் சிவபெருமானும், திருமாலும் சேர்ந்தே புறப்பட்டு காட்சி தருவது ஒரு




அருள்மிகு பிரம்மா தல விருட்சம் வன்னிமரம்

தனிச் சிறப்பு. சைவ-வைணவ ஒற்றுமையையும் காட்டுகிறது.

## 2. கோமாறவர்மன்

**திருமங்கல நாண் நோன்பு :** மார்கழி திருவாதிரை நாளில் வீரநாராயணப்பெருமாள் இந்நோன்புக்காகத் தம் தங்கை வடிவுடைநாயகிக்கு ஊஞ்சலிட்டுத் தேங்காய், சந்தனம், பூ, பட்டாடை, வெற்றலை, பாக்கு, மஞ்சள், குங்குமம், முதலிய வரிசைகளை மேள வாத்தியங்களுடனும் வேத மந்திரங்களுடனும் கொண்டு வந்து கொடுக்கும் வைபவம் நடைபெறும்.

**காவடி எடுத்தல் :** பங்குனி மாதத்தில் திருவிழா இல்லையானாலும் உத்திர நாளில் பழனிக்குக் காவடி எடுப்பவர் இவ்விடம் காவிரியில் நீராடித் தீர்த்தம் எடுத்து நிரப்பிக் கொடுமுடியின் அடையாளமான வன்னியிலையைக் கலசத்தில் வைத்துக் கொண்டு புறப்படுவார்கள். தம்பட்டம், குறுந்தடியால் அடிக்கும் பதலைப் பறை, வார் கொண்டடிக்கும் சிறுபறை, உடுக்கை, பம்பை, உறுமி, எருதின்மேல் ஏற்றிவரும் பேரிகை முதலிய வாத்தியங்களும், துளைக் கருவிகளாகிய ஊதுகொம்பு, எக்காளம், தாரை, திருச்சின்னம், துத்தாரி, நாதசுரம், புல்லாங்குழல் முதலிய வாத்தியங்களும், கஞ்சக் கருவிகளும் ஒலிக்கப் பெறும். வாத்தியங்களுக்கேற்றபடி மக்கள் ஆடியும், பாடியும் மகிழ்விப்பார்கள். இவை ஓர் திருவிழாவாக்க் காட்சி தரும்.

*"மண்ணிற் பிறந்தார் பெரும்பயன் மதிசூடும்*
*அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்*
*கண்ணினால் அவர்நல்விழாப் பொலிவு கண்டார்தல்"*
*(பெரியபுராணப் பாடல்)*

என்னும் பெரியபுராணப் பாடலின்படி மனிதராய்ப் பிறந்தவர் அனைவரும் பெருமானுக்கு நடைபெறும் திருவிழாக்களைக் கண்டு தரிசித்து பெருமான் அருளைப் பெறுவார்களாக.

# 13. கோயில் தரிசன முறை

கோயிலுக்குச் செல்வோர் நீராடிச் சிவசின்னங்களாகிய திருநீறு, உருத்திராட்சம், அணிந்து தேங்காய், பழம், சூடம், பூ முதலியவைகளில் இயன்ற அளவு எடுத்துச் செல்ல வேண்டும். முதலில் விநாயகப் பெருமானையும், சிவபிரானையும் பிறகு நடராஜர். தட்சிணாமூர்த்தி, சோமாஸ் கந்தர், சந்திரசேகரர், சமயகுரவர் நால்வர், அறுபத்து மூவர் முதலியோரையும், பிறகு தேவியாரையும், சண்டிகேசுவரரையும் முறையாகத் தரிசிக்க வேண்டும். சிறிது நேரம் மௌனமாயிருந்து தியானிக்க வேண்டும்.

# 14. வருமானமும் சொத்துக்களும்

இத்திருக்கோயிலுக்கு பெரும்பாலும் கட்டணச் சீட்டுகள், உண்டியல் மற்றும் இதர இனங்கள் மூலம் முக்கிய வருமானம் கிடைக்கப் பெற்று வருகிறது. இவற்றின் மூலம் ஆண்டுக்கு ரூ 37,66,305/= கிடைக்கின்றது.

## தர்ம சத்திரம் நந்தவனம்

அருள்மிகு மகுடேசுவர சுவாமி திருக்கோயிலுக்கு தென்புற மதில் சுவரை ஒட்டி கோயில் இடத்தில் கட்டப்பட்டுள்ள தர்ம சத்திரம் மற்றும் நந்தவனம் ஆகியன இத்திருக் கோயிலுக்கு வரும் பக்தர்கள் இலவசமாக தங்குவதற்காகவும், நந்தவனம் இத்திருக்கோயிலுக்கு புஷ்பம் வழங்கும் வகைக்கும் முற்றிலும் தர்ம காரியங்களுக்காக நிறுவப்பட்டுள்ளது.

***(கொடுமுடி சார்பதிவாளர் ஆவண பதிவு எண் 2122/1923)***

## திரு. பெரியண்ண செட்டியார் தேசாந்திரி கட்டளை

இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள அருள்மிகு வீரநாராயணப்பெருமாள் மற்றும் லட்சுமித் தாயார் இருவருக்கும் தினசரி 2படி அரிசி மற்றும் மிளகு, சீரகம், நெய் போட்டு பொங்கல் செய்து சாயங்கால பூஜையில் நிவேதனம் செய்து தேசாந்திரியாக வரும் சந்நியாசிகளுக்கு விநியோகம் செய்யவும். அருள்மிகு மகுடேசுவர சுவாமிக்கு பிரதி திங்கட்கிழமை தோறும் சாயங்கால பூஜைக்கு 2 படி அரிசி, மிளகு சீரகம் நெய் போட்டு பொங்கல் செய்து நிவேதனம் செய்து இரவு கோயிலுக்கு வரும் சந்நியாசிகளுக்கு விநியோகம் செய்ய வேண்டியும் கொடுமுடியைச் சேர்ந்த திரு. பெரியண்ண செட்டியார் என்பவர். **கொடுமுடி கிராமம் சர்வே எண். க.ச.எண் 504 ல் நஞ்சை ஏக்கர் 1-79** நிலத்தை கட்டளைக்காக எழுதிவைத்துள்ளார் இந்த கட்டளை நிர்வாகம் கொடுமுடி ஸ்ரீசங்கர வித்யாசாலா போர்டு பிரஸிடெண்ட் அவர்களால் நிர்வகிக்கப்படுகிறது.

***(கொடுமுடி சார் பதிவாளர் ஆவண பதிவு எண். 329/ 1926)***

# 15. நிர்வாகம்

இத்திருக்கோயில் தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் கீழ் இயங்கி வருகின்றது. இது ஒரு முதல் நிலை கோயிலாகும். இதன் நிர்வாகத்தை அரசு அலுவலரான முதல் நிலை செயல் அலுவலரும், மற்றும் அறங்காவலர்களும் கவனித்து வருகின்றார்கள். இத்திருக்கோயிலில் உள்துறை மற்றும் வெளித் துறையில் 35 பணியாளர்கள் பணியாற்றி வருகின்றார்கள். பணியாளர்களின் நலன் கருதி அரசு அறிவிக்கும் நலத் திட்டங்கள் அவ்வப்போது அமுல்படுத்தப்பட்டு வருகின்றது. ஓய்வு பெற்ற அர்ச்சகர் மற்றும் ஓதுவார்களுக்கு அரசால் ஓய்வூதியம் வழங்கப் பெற்று வருகிறது. பணியாளர்களுக்கு சேமநல திட்டங்கள் அமுலில் உள்ளன. அரசு விடுமுறை நாட்கள் தவிர இதர நாட்களில் அலுவலகம் இயங்கும்.

*அலுவலக நேரம் : காலை 9-45 முதல் 5-45 மணி*
*திருக்கோயில் நடை திறந்திருக்கும் நேரம்*
*காலை 6-00 முதல் 12-30 மணி வரை*
*மாலை 3-00 முதல் 8-00 மணி வரை*
*விழாக்காலங்களில் மட்டும் பக்தர்களின் நலனுக்காக*
*கால நேரம் மாறுபடும்.*

### திருக்கோயில் மூலம் நடைபெறும் சமூகப் பணிகள்

அன்பு இல்லம் ஒன்று இயங்கி வருகின்றது. அன்பு இல்லத்தில் 1-ம் வகுப்பு முதல் + 2 வரை மாணவர்கள் பயின்று வருகின்றார்கள். உணவு, உடை, இருப்பிடம் இலவசமாக வழங்கப்படுகின்றது. அன்பு இல்லத்திற்கு ஆண்டு 1-க்கு சுமார் 2,00,000/= திருக்கோயில் நிதியிலிருந்து செலவிடப்படுகிறது.

### <u>தினசரி அன்னதான திட்டம்</u>

இத்திருக்கோயிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் அறிவிப்பின் படி நன்கொடையாளர்கள் பங்கேற்புடன் பக்தர்களுக்கு தினசரி மதிய உணவு வழங்கும் அன்னதான திட்டம் ஒன்று 15-8-2002 முதல் தொடங்கப்பட்டு நடைபெற்றுவருகிறது.

# 16. புராண வரலாறுகள்

இத்தலத்தின் பெருமைகளைத் தொகுத்து வடமொழியிலும்,

தென்மொழியிலும் புராணங்கள் உள்ளன. திருப்பாண்டிக் கொடுமுடிப் புராணம் என்னும் நூல் பாடல்களில் உள்ளது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. நைமிசாரண்யச் சருக்கம் முதல் பரத்துவாசச் சருக்கம் வரையில் 17 சருக்கங்கள் வருகின்றன. அவைகளில் முக்கியமான சில வரலாறுகள் வருமாறு :-

**1. கொடுமுடி வரலாறு :** முன்பு ஒரு காலத்தில் இந்திரனது சபையில் வாயுதேவனுக்கும், ஆதிசேடனுக்கும் தங்களுடைய வலிமையைக் குறித்து வாதம் நிகழ்ந்தது. முடிவில் ஆதிசேடன் மேருமலையின் சிகரங்களை அசையாது சுற்றிக் கொண்டான். வாயுதேவன் மிகவும் வலிமையுடன் அவ்விதம் தகர்த்த போது ஐந்து துண்டுகள் ஐந்து மணிகளாக ஐந்து இடங்களில் வீழ்ந்து ஐந்து தலங்கள் ஆயின. அவைகளில் சிவப்பு மணி வீழ்ந்த இடம் திருவண்ணாமலையாகவும், மரகதம் வீழ்ந்த இடம் திருஈங்கோய் மலையாகவும், மாணிக்கம் வீழ்ந்த இடம் இரத்தினகிரி (சிவாயமலை) யாகவும், நீலமணி வீழ்ந்த இடம் திருப்பொதிகை மலையாகவும், அமைந்தன. ஐந்தாவதாக வைரம் வீழ்ந்த இடம் கொடுமுடியாக அமைந்தது. கொடுமுடி என்பது பெரிய சிகரம் என்று பொருள்படும். மலைச் சிகரமே மகுடலிங்கராக அமைந்துள்ளது. மற்ற சிகரங்கள் எல்லாம் மலைகளாக காட்சி தந்து கொடுமுடி மட்டும் லிங்க வடிவமாக அமைந்துள்ளது. எனவே கொடுமுடியும் ஒரு மலைச் சிகரமாகும். இதைக் குறிக்கும் பாடல் வருமாறு :-

*"சீர்கொள் பொன்வரைச் சிகர மொன்றநாள்*
*ஏர்கொள் வாயுதான் எறிய வீழ்ந்தெழில்*
*பார்குழிந்த தன் குடுமி பண்ணவன்*
*பேர்கொள் இலிங்கமாய் பிறங்கும் ஒண்தலம்"*

*"கங்கைநாயகி விளங்குசெஞ் சடையது கஞ்சச்*
*செங்கைநாயகி செழுமலர்த் தவிசில் வீற்றிருக்கும்*
*மங்கையாகி வடிவுடை நாயகி மணிப்பூண்*
*கொங்கைநாயகி பங்கது கொடுமுடி லிங்கம்"*

*(தல புராணம்)*

**2. மலையத்துவச பாண்டியன் வரலாறு :** பாண்டியர்களில் மலையத்துவச பாண்டியன் தன் மகனுக்கு கொடுமுடியில் கைவிரல் வளரப் பெற்றதை எண்ணி மிகவும் மகிழ்ந்து கொடுமுடி நாயகருக்குப் பல திருப்பணிகளைச் செய்ய விரும்பினான். மகுடலிங்கருக்கும், பெருமாளுக்கும், தேவிக்கும், கோயிலும், கோபுரங்களும், மண்டபங்களும் அமைத்தான். விநாயகர், முருகன், நடராசர்,

உமாமகேசுவரர், நந்திகேசுவரர், சூரியன், சந்திரன், சப்தமாதர், பைரவர், சண்டிகேசுவரர் முதலிய மூர்த்திகளுக்கு மண்டபங்களும் சந்நிதிகளும் அமைத்தான். அடியார்களுக்கு மடமும், அன்னசாலையும், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் முதலியோர்களுக்கு இல்லங்களும், வீதிகளும் அமைத்தான், பெரிய தேர் ஒன்றையும் செய்வித்தான்.

மேலும் கொடுமுடி நாதருக்கும், வீரநாராயணப்பெருமாளுக்கும் அபிஷேக ஆராதனைகள் செவ்வையாய் நடைபெற பல கிராமங்களைத் தேவதானமாக வழங்கினான். மூர்த்திகளுக்குப் பல ஆபரணங்களையும் செய்வித்தான். சித்திரை மாதம் பெருந்திருவிழா நடைபெறவும் தோரோட்டம் நிகழவும் பல திட்டங்களையும் அமைத்தான். இவ்வாறு மலையத்துவச பாண்டியன் கொடுமுடித் தலத்திற்குப் பல திருப்பணிகள் செய்து நகரமைத்து விழாச் செய்ததால் திருப்பாண்டிக் கொடுமுடி என்றும், தன் மகனுக்குப் பெருவிரல் அங்கம் வளரப் பெற்றதால் அங்கவருந்தனபுரம் என்றும் பெயர்கள் ஏற்பட்டன.

**3. அகத்தியரும் காவிரியும் :** இமயகிரியில் சிவபிரானுக்கும், பார்வதிக்கும் திருமணம் நிகழ்ந்தபோது தேவர், மானிடர் முதலியோர் ஒன்று கூடியதால் சமம் செய்யும்படி அகத்தியரை தென் திசையிலுள்ள பொதிகை மலைக்கு அனுப்பினார். அகத்தியர் தென்திசை வரும்போது விந்திய மலையின் செருக்கை அடக்கி வில்லவன், வாதாபி என்னும் அசுரர்களின் வலிமையை அழித்து கொங்கு நாடு அடைந்து ஒரு மலையில் தங்கித் தவம் செய்தார். அகத்தியரின் கமண்டலத்தில் கங்கை நீர் நிறைந்திருந்தது.

தேவலோகத்திற்குத் தலைவன் இந்திரன் தன் நாட்டிற்கு நன்மை ஏற்படும் வகையில் வேற்றுருக் கொண்டு சீர்காழியில் நந்தவனம் வைத்துப் பெருமானை வழிபட்டு வந்தான்.
அப்போது மழை இல்லாமல் போகவே இந்திரன் பெருமானிடம் முறையிட்டான். சிவபெருமான் விநாயகரிடம் காக்கை வடிவங் கொண்டு அகத்தியரின் கமண்டல நீரைக் கவிழ்க்கும்படி கட்டளையிட்டார். அவ்வாறே விநாயகர் வெள்ளைக் காக்கை உருவங் கொண்டு அகத்தியரின் கமண்டல நீரைக் கவிழ்த்தார். கமண்டல நீரே காவிரி நதியாக ஓடத் தொடங்கியது. இவ்வாறு கவிழ்க்கப்பட்ட இடமே கொடுமுடித்துறை என்பர். இவ்விடம் காவிரி தெற்கு நோக்கி வந்து இங்கிருந்து கிழக்கு நோக்கி ஓடுகிறது. இவ்விடத்தில் காவிரியின் நடுவில் "அகத்தியர் பாறை" என வழங்கும் பாறையில் இவ்வரலாறு குறிக்கும் திருவுருவங்கள்

இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

திருச்சி மாவட்டத்தில் கல்லணையிலும் அகத்தியர் கமண்டல நீரை விநாயகராகிய காக்கை கவிழ்க்கும் சிற்பம் அழகாக அமைக்கப்பட்டுள்ளது. இவ்வரலாற்றைக் குறிக்கும் பாடல்கள் வருமாறு:

*"சூர் ருலாதிபன் தூய்மலர் நந்தனம்*
*பெருக வார்கடல் பெய்த வயிற்றினோன்*
*கரக நீரைக் கவிழ்த்த மதகரி*
*சரணம் நாளும் தலைக்கணி யாக்குவாம்"*

*(பிரபுலிங்க லீலை)*

*"செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளங்கும்*
*சஞ்சவேட் கையிற் காந்தமன் வேண்ட*
*அமர முனிவன் அகத்தியன் தனாது*
*கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை"*

*(மணிமேகலை)*

*"திங்கள் மாலை வெண்குடையான் சென்னிசெங்கோ லதுவோச்சிக்*
*கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய்வாழி காவேரி*
*கங்கைதன்னைப் புணர்ந்தாலும் புலவாதொழிதல் கயற்கண்ணாய்*
*மங்கைமாதர் பெருங்கற்பென்று அறிந்தேன் வாழிகாவேரி"*

*(சிலப்பதிகாரம்)*

இக்காரணத்தால் இத்தலத்திலுள்ள விநாயகருக்கு காவிரி கண்ட விநாயகர் எனப் பெயர் வழங்குகிறது. தெய்வத் தன்மையுள்ள காவிரி தன் கலைகள் நிரம்பிப் பெருக்கெடுத்துச் சோழ நாடடைந்து சோலைகளின் வழியே பாய்ந்து வளமுறச் செய்து முடிவில் காவிரிப் பூம்பட்டினத்தில் கடலில் சங்கமம் ஆகிறது. பின்பு அகத்தியர் விரும்பியபடியே சிவபிரான் வடிவாம்பிகை வலத்தில் விளங்கத் தமது திருமணக்கோலக் காட்சியை கொடுமுடியில் அருளினார்.

*"மாற்றருந் தவத்தீர் பொன்னி மாநதிப் பெருமையாவும்*
*சாற்றுதற் கெளிதோ இந்தத் தலத்தினிற் சிறக்கும் பொன்னி*
*ஏற்றஇக் காதைமுற்றும் எழுதினோர் படித்தோர்க்கெல்லாம்*
*கூற்றுதைத் திட்டஎம்மான் திருவருள் கூடுமன்றே"*

*(தலபுராணம்)*

**4. பரத்துவாசருக்கு நடனக்கோலங் காட்டியது :** பரத்துவாசர் வேதாகமங்களைக் கற்றவர். தவத்திற் சிறந்தவர். அவர் பல தலங்களைத் தரிசித்துக் கொடுமுடித் தலத்தை அடைந்தார். தினமும் காலையில் காவிரியில் நீராடி வன்னி மரத்தடியில் தங்கிப் பொன்னம்பலத்தில் நடனமாடும் நடராஜப் பெருமானின் திருவடிகளைச் சிந்தித்துத் தவமிருந்து வந்தார். மகுடலிங்கரையும் தினந்தோறும் வழிபட்டு வரலானார். பெருமான் அவருக்குத் திருவருள் செய்ய வேண்டி நந்திதேவர் முதலிய கணங்களும், முனிவர்களும் சூழ்ந்து வரவும், நந்தியும், திருமாலும் மத்தளம் கொட்டவும், பிரமன் பொற்றாளம் இசைக்கவும், தும்புறு, நாரதர் முதலியோர் யாழ் வாசிக்கவும், முனிவரும் மற்றையோரும் கண்டு மகிழும்படி சித்திர நடனம் செய்தருளினார். எல்லோரும் தரிசித்துப் பேரானந்தக் கடலில் மூழ்கிப் போற்றினார்கள். இவ்வாறு பெருமான் பரத்துவாசர் முதலியோருக்கு நடனக் காட்சியளித்ததால் இத்தலத்துக்குப் பரத்துவாச சேத்திரம் என்று பெயர் ஏற்பட்டது. இவர் பெயரால் ஒரு தீர்த்தமும் உள்ளது.

*"மங்கையோர் பாகா போற்றி மதனுடல் எரித்தாய் போற்றி*
*செங்கையின் மழுவாய்போற்றி திரிபுரம் எரித்தாய் போற்றி*
*எங்களுக் கரசேபோற்றி ஈசனே எந்தாய் போற்றி*
*சங்கரா போற்றிபோற்றி அயநடம் போற்றிபோற்றி"*

*(தலபுராணம்)*

*மானாட மழுவாட மதியாட புனலாட*
*மங்கைசிவ காமியாட*
*மாலாட நூலாட மறையாட திறையாட*
*மறைதந்த பிரமனாட*
*கோனாட வானுலகு கூட்டமெல்லாம் ஆட*
*குஞ்சர முகத்தனாட*
*குண்டல மிரண்டாட தண்டைபுலியுடை யாட*
*குழந்தை முருகேசனாட*
*ஞானசம்பந்த ரொடு இந்திரர் பதினெட்டு*
*முனியட்ட பாலகருமாட*
*நரை தும்பை யருகாட நந்திவாகன மாட*
*நாட்டியப் பெண்களாட*
*வினையோட உனைப்பாட எனைநாடி யிதுவேளை*
*விருதோடு ஆடிவருவாய்*
*ஈசனே சிவகாமி நேசனே எனையீன்ற*
*தில்லைவாழ் நடராசனே*

### திருக்கோயிலுக்கள் செய்யத்தகாதவை.

1. மலசலங் கழித்தல் 2. எச்சில் உமிழ்தல் 3. சூதாடுதல்
4. ஆசாரமில்லாது செய்தல் 5. வீண்வார்த்தை பேசுதல்
6. அவசரமாய் வலம் வருதல்
7. நந்தி தேவருக்கும் சிவபெருமானுக்கும் குறுக்கே போதல்
8. நிர்மாலியப் பொருள்களை மிதித்தல்
9. லாகிரி வஸ்துகளை உபயோகித்தல்

# 17. இலக்கியப் பாடல்கள்.

## 1. திருப்பாண்டிக் கொடுமுடிப் புராணம்

### கடவுள் வாழ்த்து

### காப்பு

1. *முழவொலி திகழ் கொடுமுடியின் மாக்கதை*
*பழகிய நூ நெறிப்படி விளங்கவே*
*மழகதி ரொளியொரு மருப்பு வாரண*
*வழகிய விநாயக ணடிகள் போற்றுவோம்.*

### நடராஜர் துதி

2. *சீர்தந்த துளவனு நாற்றிசை*
*தந்தமுகனு முயர்தேவர் போற்ற*
*வார்தந்த களபமுலை மலைதந்த*
*வனிதைவிழி மகிழ்ந்துகாணப்*
*பேர்தந்த புலியூரிற் பிறைதந்த*
*சடைமௌலிப் பெருமாள் மன்றி*
*லேர்தந்த நடம்புரியும் மிணைதந்த*
*மலர்ப்பாத மிதயஞ் சேர்ப்பாம்.*

### மகுடேசர் துதி

3. *நெடுமுடிமா லயன்மகவான் முதலின*
*ராவியை நிறைநீ ரெழுந்தவிரைக்*
*கடுமுடியா தருள்சுரந்த காலகண்டன்*
*மேலலையண்டாங் கடந்தோ னாகி*
*நடுமுடிநா டற்கறியா னவிலுநான்*
*மறைச்சிரத் திண்டிக்கும் பாண்டிக்*
*கொடுமுடிநா யகன்கமல மலரடிநாண்*
*மலர்தூவிக் குறித்துள் வைப்பாம்.*

## வடிவுடை நாயகி.

4. பெருங்கறையூ ரடிவேழ வதள்போர்த்த
புனிதனெடும் புணரி யீன்ற
கருங்கறையூர் மனமிடற்றோன் கொடுமுடி
நாயகன் வலப்பாற் கவினத்தோன்று
நெருங்கறையூர் மணிமாட நிறைதருமா
வணவீதி யளகை நேர்ந்து
வருங்கறையூர் வடிவுடைய நாயகிதன்
மலர்ப்பாத மனத்துள் வைப்பாம்.

## வாலாம்பிகை.

5. வெடிவாளை யுழவாளை யிகல்கறையூர்
மிளிர்வாளை வேத மோதிப்
படிவாளை இறைவலங் கொண்டுறைவாளை
மலர்தூவிப் பணிவோர் பாவங்
கடிவாளை அடியருளாங் கனிவாளை
வரிநெடுங் கண்கயலை வேலை
வடிவாளை நிகர்வாளை வளர்வாளை
அடிபேணி வாழ்த்து வோமே

## ஸ்ரீ வீரநாராயணப்பெருமாள்

6. பேராழி தருமமுதிற் பிறந்ததிரு
மருமார்பன் பிறழ்கல் லோல
நீராழி நிலங்கடந்த சரணனெடு
முடியகல் வானிமிர நின்றோன்
காராழி வனசமலர் பூத்தன்ன
திருக்கறையூர்க் கண்ணன் செங்கைப்
போராழி வளைபுனைந்த வீர
நாராயணன் றாள்போற்றல் செய்வோம்.

## திருமகள்.

7. பாற்கடலிற் பிறந்துசெல்வப் பயிர்தழைத்துப்
பார்விசும்பு படர்ந்து நீண்ட
சேர்கருங்கட் புயற்கூந்தற் சனகபிரான்
மடமகளாய்ச் சிறந்து செஞ்சோ
ணாற்கவிமுத் தமிழ்க்கறையூர் வீர
நாரணன் பதுமநாபன் செங்கண்
மாற்கருணைத் திருமங்கை நாச்சியார்
பொற்பதங்கள் வாழ்த்தல் செய்வாம்.

## பிரமன்.

8. பொன்னிநீள் குடகரைப் பாற்பொழிந்த
கொடுமுடிநாதர் பொற்பாற் கோயில்
தன்னினீ ளெடியோனுந் தாழவளர்
ருயருருவாத் தகைமை சார்ந்து
மின்னினீண் மலர்கனி முள்விளையாத
நிருவிகற்பம் விளங்கி யோங்கு
வன்னிநீ ழலிலமலர்ந்து வாழுநான்முகன்
திருத்தாள் வணங்கி வாழ்வாம்

## காவேரி கண்ட விநாயகர்.

9. சேவேரி னுழுங்கழனி வரிவாளை
விசும்பகடு திறந்து மீண்டு
தாவேரி யந்தடமுந் தண்டலையுந்
தவழ்கறையூர் தயங்கி நாளும்
பூவேரி வண்டுநுகர்ந் திசைபாடும்
பொதும்பர் பொதுளுந் தீரக்
காவேரி கண்டவிநா யகநளின
மலர்ப்பாதங் கருத்துள் வைப்பாம்.

## கந்தப்பெருமான்.

10. மஞ்சசேவற் பெருநிறத்தா ருகற்காய்ந்து
புள்வரையை மாய்த்து வானோர்
நெஞ்சேவற் பெருஞ்சிறைமீட் டிந்திரன்
விண்ணாட்டுரிமை நிறுவி யன்பர்
மிஞ்சேவற் பெருங்கறையூர்க் கொடுமுடி
யாலயத்துள் வடமேல்பால் வாழுஞ்
செஞ்சேவற் கொடிவடிவேற் சேவடிக்
கமலஞ் சென்னி சேர்ப்பாம்.

## தட்சிணாமூர்த்தி

11. பனிமதிச்செஞ் சடைநுதல்வெண் ணீற்றொளி
முச்சுடர் விழியும் பவளவாயுங்
கனிமொழிப்புன் சிறுநகையுந் திருமுகமுங்
கறைமிடறுங் கரங்க ணான்குந்
தொனிமலர்த்தாள் முயலகன்மேற் றுதைந்தொரு
கல்லாலி னிழற்றோன்றி நால்வர்க்
கினியமோழி பகர்கறையூர்த் தக்கிணாமூர்த்தி
பொற்றா ளிதயஞ் சேர்ப்பாம்.

## சூரியன்

12. விண்மணியா வெவ்வுயிர்க்கும் கண்மணியா
யுலகிருளை வீட்டி வேதப்
பண்மணியார் திருப்பாண்டிக் கொடுமுடியார்
சன்னிதி முன்பாலில் வாழும்
எண்மணியா யிரங்கிரணம் இலகுமுசா
தேவியொடு மெழிலார் சாயைப்
பெண்மணிநா யகன்கதிரோன் பொன்மணித்தாள்
பணிந்துவினைப் பிணிகள் தீர்வாம்

## நந்திதேவர்.

13. பொருநந்தி விடைமிசையம் பிகையொருபாற்
பொலிய வெதிர்போந்து காட்சி
தருநந்தி யுருவமறி மான்மழுவுஞ்
சுரிகையும் வேத்திரமுந் தாங்கி
வருநந்தின் குழையர்திருக் கொடுமுடியா
ரோலக்கம் வாய்ந்து கூறுந்
திருந்நந்தி யடிகளினை யடிகண்
முடிகல னாகச்சென்னி சேர்ப்பாம்.

## சண்டேசர்.

14. எந்தையருச் சனைக்கிடையூ றிழைத்தன
னென்பதனை மனத்தெண்ணி யீன்ற
தந்தையெனக் கருதாது சரணிறப்ப
மழுவெறியுந் தகையாற் றாம
முந்துபரி கலமுதவுங் கொடுமுடியார்
தூவியின் கோமுகைப் பிற்பாங்கர்ப்
புந்தியிலஞ் செழுத்தகலாப் போதகர்
சண்டேசர் பொற்றாள் போற்றுகிற்பாம்.

## திருஞானசம்பந்தர்.

15. கருஞான சம்பந்தங்களை களைகண்
மழவிடைமீக் கலந்து தோன்ற
வொருஞான சம்பந்தத் தொடுமுலைப்பால்
குழைத்துமை மானூட்ட வுண்டு
தருஞான சம்பந்தத் தமிழ்பாடிச்
சமயநிலை நிறுவுஞ் சண்பைத்
திருஞான சம்பந்தப் பெருமான்பூங்
கழலிதயந் திகழ வைப்பாம்.

## திருநாவுக்கரசர்

16. மாவரை யானையை யுரித்துப்
போர்த்தவரை வரியுழுவைச் சருமவாடை
மேவரை யரைத்திரை நீர்வேலை
விடமுண்ட வரைவிபுதர் போற்றுந்
தேவரை வேதண்டவரைச் சிகரியரைத்
தீந்தமிழா லாய்ந்து பாடு
நாவரை யரைப்பரசி விரைசெறிநாள்
மலர் தூவி நவின்று வாழ்வாம்.

## சுந்தரர்.

17. நூலாலந் தணர்நுவலு மறையோனை
நுடங்கு மிளம்பிறை பூங்கண்ணி
கோலாலந் திகழ்ச்சிரத்தோ டொளிர்மிடறு
காட்டுமெங் குருவைத் தூவெண்
பாலாலந் திகழ்மொழிக்கட் பரவை
மானிடத்தூ துபணித்த நண்பா
ராலால சுந்தரர்தம் பாதமலர்
பணிபுரிதற் காளா வேமால்.

## மாணிக்கவாசகர்.

18. வேணிக்க ணிலவணிந்தோன் விரைமலர்த்தாள்
சிரஞ்சூட்டி விபுதர் யோகர்
பேணிக்கண் மலர்தூவும் பெருந்துறையி
லாளுதலும் பெருகு ஞான
வாணிக்கண் ணுயர்வீந்து மன்றமமர்
பேரொளிக்குள் மறைந்த மோன
மாணிக்க வாசகன்றா ளிறைஞ்சி
வினைவாட்டி யருள்வாழ்வு கொள்வாய்.

## இதர நாயன்மார்கள்.

19. தில்லைவா ழந்தணரே முதலாமெய்
யருட்செல்வர் திருத்தாள் போற்றி
யெல்லைவாழ்ந் திடுமடியா ரவரடியா
ரடிக்கமல மிசைந்து பூமே
லொல்லைவீழ்ந் திடுபொடியெஞ் சிரக்கணியா
யிருகரங் கொண்டுவெப்பிற் சூட்டித்
தொல்லையாம் பிறவினைத் தொடக்கறுத்துச்
சிவவமுதந் துய்த்து வாழ்வாம்.

## அகத்தியர்.

20. சந்தமேவும் தமிழியல் செய்தவன்
விந்தவெற்பின் விறலினை வென்றவன்
கந்தமாமலர்க் காவிரி தந்தவன்
செந்தமிழ்முனி சேவடி போற்றுவாம்.

# திருப்பாண்டிக் கொடுமுடி மூவர் தேவாரப் பதிகங்கள்

## 2. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அருளியது

2ந்திருமுறை திருச்சிற்றம்பலம் பண் : காந்தாரம்

பெண்ணமர் மேனியினாரும் பிறைபுல்கு செஞ்சடையாரும்
கண்ணமர் நெற்றியினாருங் காதமருங் குழையாரும்
எண்ணமருங் குணத்தாரு மிமையவரேத்த நின்றாரும்
பண்ணமர் பாடலினாரும் பாண்டிக் கொடுமுடியாரே. 1.

தனைக்கனிமா மலர்கொண்டு தாடொழுவா ரவர்தங்கள்
வினைப்பகையா யினதீர்க்கும் விண்ணவர்விஞ் சையர்நெஞ்சில்
நினைத்தெழுவார் துயர்தீர்ப்பார் நிரைவளைமங்கை நடுங்கப்
பனைக்கைப் பகட்டுரிபோர்த்தார் பாண்டிக் கொடுமுடியாரே. 2.

சடையமர் கொன்றையினாருஞ் சாந்தவெண் ணீரணிந்தாரும்
புடையமர் பூதத்தினாரும் பொறிகிளர்பாம் பசைத்தாரும்
விடையமருங் கொடியாரும் வெண்மழுமூ விலைசூலப்
படையமர் கொள்கையினாரும் பாண்டிக் கொடுமுடியாரே. 3

நறைவளர் கொன்றையினாரும் ஞாலமெலாந் தொழுதேத்தக்
கறைவளர் மாமிடற்றாருங் காடரங்காக் கனலேந்தி
மறைவளர் பாடலினோடு மண்முழவங் குழன்மொந்தை
பறைவளர் பாடலினாரும் பாண்டிக் கொடுமுடியாரே. 4.

போகமுமின் பமுமாகிப் போற்றியென்பா ரவர்தங்கள்
ஆகமுறைவிட மாக அமர்ந்தவர் கொன்றை யினோடும்
நாகமுந் திங்களுஞ் சூடிநன்னுதன் மங்கைதன் மேனிப்
பாகமுகந் தவர்தாமும் பாண்டிக் கொடுமுடியாரே. 5.

கடிபடு கூவிளமத்தங் கமழ்சடைமே லுடையாரும்
பொடிபட முப்புறஞ்செற்ற பொருசிலையொன் றுடையாரும்
வடிவுடை மங்கைதன் னோடுமணம்படு கொள்கையினாரும்
படிபடுகோ லத்தினாரும் பாண்டிக் கொடுமுடியாரே. 6.

ஊனமர் வெண்டலையேந்தி யுண்பலிக்கென் றுழல்வாரும்
தேனமரும் மொழிமாது சேர்திரு மேனியினாரும்
கானமர் மஞ்ஞைகளாலுங் காவிரிக் கோலைக்கரைமேல்
பானலநீ றணிவாரும் பாண்டிக் கொடுமுடியாரே. 7.

புரந்தரன் தன்னொடுவானோர் போற்றியென்றேத்த நின்றாரும்
பெருந்திறல் வாளரக்கன்னைப் பேரிடர்செய் துகந்தாருங்
கருந்திரைமா மிடற்றாருங் காரகில்பன் மணியுந்திப்
பரந்திழிகா விரிப்பாங்கர்ப் பாண்டிக் கொடுமுடியாரே. 8.

திருமகள் காதலினானுந் திகழ்தருமா மலர்மேலைப்
பெருமகனும் மவர்காணாப் பேரழலாகிய பெம்மான்
மருமலி மென்மலர்ச்சந்து வந்திழி காவிரிமாடே
பருமணிநீர்த் துறையாரும் பாண்டிக் கொடுமுடியாரே. 9.

புத்தரும் புந்தியிலா தசமணரும் பொய்ம் மொழியல்லான்
மெய்த்தவம் பேசிடமாட்டார் வேடம் பல பலவற்றால்
சித்தருந் தேவருங்கூடிச் செழுமலர்நல் லனகொண்டு
பத்தர்கள்தாம் பணிந்தேத்தும் பாண்டிக் கொடுமுடியாரே. 10.

கலமல்குதண் கடல்சூழ்ந்த காழியுண்ஞான சம்பந்தன்
பலமல்குவெண் டலையேந்திப் பாண்டிக்கொடுமுடி தன்னைச்
சொலமல்குபா டல்கள்பத்துஞ் சொல்லவல்லார் துயர்தீர்ந்து
நலமல்குசிந் தையராகி நன்னெறியெய்துவர் தாமே. 11.

திருச்சிற்றம்பலம்

## 3. திருநாவுக்கரசு நாயனார் அருளியது

5 ந்திருமுறை திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

சிட்டனைச் சிவனைச் செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை யால நிழலமர்
பட்டனைத் திருப் பாண்டிக் கொடுமுடி
நட்டனைத் தொழ நம்வினை நாசமே. 1.

பிரமன் மாலறியாத பெரு மையன்
தரும மாகிய தத்துவ னெம்பிரான்
பரம னாருறை பாண்டிக் கொடுமுடி
கரும மாகத் தொழுமட நெஞ்சமே. 2.

ஊசலா ளல்லள்ஒ ண்கழ லாளல்லள்
தேசமாந் திருப் பாண்டிக் கொடுமுடி
ஈசனே யெனு மித்தனை யல்லது
பேசுமா றறியா ளொரு பேதையே 3.

தூண்டிய சுடர்போ லொக்குஞ் சோதியான்
காண்டலு மெளியன் னடியார் கட்குப்
பாண்டிக் கொடுமுடி மேய பரமனைக்
காண்டு மென்பவர்க் கேதுங் கருத்தொணான். 4.

நெருக்கி யம்முடி நின்றிசை வானவர்
இருக் கொடும் பணிந்தேத்த விருந்தவன்
திருக் கொடுமுடி என்றலுந் தீவினைக்
கருக் கெடும்இது கைகண்ட யோகமே. 5.

*திருச்சிற்றம்பலம்*

## 4. சுந்தரமூர்த்தி நாயனார் அருளியது

*7ந் திருமுறை* *திருச்சிற்றம்பலம்* *பண் : பழம்பஞ்சுரம்*

*1. மற்றுப்பற்றெனக் கின்றி நின்றிருப்*
*பாதமேமனம் பாவித்தேன்*
*பெற்றலும் பிறந் தேனினிப்பிற*
*வாததன்மைவந் தெய்தினேன்*
*கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை*
*யூரிற்பாண்டிக் கொடுமுடி*
*நற்றவாவுனை நான்மறக்கினும்*
*சொல்லுநா நமச்சிவாயவே*

*2. இட்டனுமடி யேத்துவாரிகழ்ந்*
*திட்டநாள்மறந் திட்டநாள்*
*கெட்டநாளிவை யென்றலாற்கரு*
*தேன்கிளர் புனற்காவிரி*
*வட்டவாசிகை கொண்டடிதொழு*
*தேத்துபாண்டிக் கொடுமுடி*
*நட்டவாவுனை நான் மறக்கினும்*
*சொல்லுநா நமச்சிவாயவே.*

*3. ஓவுநாளுணர் வழியுநாளுயிர்*
*போகுநாளுயர் பாடைமேற்*
*காவுநாளிவை யென்றலாற்கரு*
*தேன்கிளர் புனற்காவிரிப்*
*பாவுதபுனல் வந்திழிபரஞ்*
*சோதிபாண்டிக் கொடுமுடி*
*நாவலாவுனை நான்மறக்கினும்*
*சொல்லுநா நமச்சிவாயவே.*

4. எல்லையில்புக ழெம்பிரானெந்தைத்
தம்பிரானென் பொன்மாமணி
கல்லையுந்திவளம் பொழிந்திழி
காவிரியதன் வாய்க்கரை
நல்லவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடி
வல்லவாவுனை நான் மறக்கினும்
சொல்லுநா நம்ச்சிவாயவே.

5. அஞ்சினார்கர ணாதியென்றடி
யேனுநான்மிக வஞ்சினேன்
அஞ்சலென்றடித் தொண்டனேற்கரு
ணல்கினாய்க்கழிக் கின்றதென்
பஞ்சின்மெல்லடிப் பாவைமார்குடைந்
தாடுபாண்டிக் கொடுமுடி
நஞ்சணிகண்டநான் மறக்கினும்
சொல்லுநா நமச்சிவாயவே.

6. எடுவானிளந் திங்கள்சூடினை
யென்பின்கொல்புலித் தோலின்மேல்
ஆடுபாம்பதரைக் கசைத்தவழகனே
யந்தண் காவிரிப்
பாடுதண்புனல் வந்திழிபரஞ்
சோதிபாண்டிக் கொடுமுடிச்
சேடனேயுனை நான்மறக்கினும்
சொல்லுநா நமச்சிவாயவே.

7. விரும்பிநின்மலர்ப் பாதமேநினைந்தேன்
வினைகளும் விண்டனன்
நெருங்கிவண்பொழில் சூழ்ந்தெழில்பெற
நின்றகாவிரிக் கோட்டிடைக்
குரும்பைமென்முலைக் கோதைமார்குடைந்
தாடுபாண்டிக் கொடுமுடி
விரும்பனேயுனை நான்மறக்கினும்
சொல்லுநா நமச்சிவாயவே.

8. செம்பொனேர்சடை யாய்திரிபுரந்
தீயெழச்சிலை கோலினாய்
வம்புலாங்குழலாளைப் பாகமமர்ந்து
காவிரிக் கோட்டிடைக்

*கொம்பினமேற் குயில்கூவமாமயி*
*லாடுபாண்டிக் கொடுமுடி*
*நம்பனேயுனை நான்மறக்கினும்*
*சொல்லுநா நமச்சிவாயவே.*

9. *சாரணன்றந்தை யெம்பிரானெந்தை*
*தம்பிரானென்பொன் மாமணியென்று*
*பேரெணாயிரக்கோடி தேவர் பிதற்றி நின்று பிரிகிலார்*
*நாரணன் பிரமன் தொழும் கறை*
*யூரிற்பாண்டிக் கொடுமுடி*
*காரணாவுனை நான்மறக்கினும்*
*சொல்லுநா நமச்சிவாயவே.*

10. *கோணியபிறை சூடியைக்கறை*
*யூரிற்பாண்டிக் கொடுமுடி*
*பேணியபெரு மானைப்பிஞ்ஞகப்*
*பித்தனைப்பிறப் பில்லியைப்*
*பாணுலாவரிவண் டறைகொன்றைத்*
*தாரனைப்படப் பாம்பரை*
*நாணனைத்தொண்ட னூரன்சொல்லிவை*
*சொல்லுவார்க் கில்லைதுன்பமே.*

*திருச்சிற்றம்பலம்*

## 5. கபிலதேவ நாயனார்.

*(பதினோராந் திருமுறை - திருவிரட்டை மணிமாலை)*

நிறம்பிறிதா யுளமெலிந்து நெஞ்சுருகி வாளா
புறம்புறமே நாள்போக்கு வானோ - நறுந்தேன்
படுமுடியாய் பாய்நீர் பரந்தொழுகு பாண்டிக்
கொடுமுடியாய் என்றன் கொடி.

## 6. பன்னிரண்டாம் திருமுறை - பெரிய புராணம்

அப்பதியின் கண்அமர்ந்து சிலநாளில் அங்ககன்று
துப்புறழ்வை ணியர்தானம் பலவுந்தொழு தருளி
முப்புரிநூ லுடன்தோ லணிமார்பர் முனிவரொடும்
செப்பருஞ்சீர் திருப்பாண்டிக் கொடுமுடிசென் றணைந்தார் . (337)

# 41
## திருச்செங்குன்றூர்

பருவமாறாப் பொன்னிப்பாண்டிக் கொடுமுடியார் தம்பாதம்
மருவி வணங்கி வளத்தமிழ் மாலைமகிழ்ந்து சாத்தி
விரிசுடர் மாளிகை வெஞ்சமாக் கூடல் விடையவர்தம்
பொருவிறா னம்பல போற்றிக் குணதிசைப் போதுகின்றார். (338)

### சுந்தரர்

(ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்)

*பரவிஅப் பதிகத் திருக்கடைக் காப்புச்*
*சாத்திமுன் பணிந்(து) அருள்பெற்றுக்*
*கரவில்அன் பர்கள்தங் கூட்டமுந் தொழுது*
*கலந்தினி திருந்து போந்தருளி*
*விரவிய ஈங்கோய் மலைமுத லாக*
*விமலர்தம் பதிபல வணங்கிக்*
*குரவலர் சோலை அணிதிருப் பாண்டிக்*
*கொடுமுடி அணைந்தனர் கொங்கில்.* 85

*கொங்கினிற் பொன்னித் தென்கரைக் கறையூர்க்*
*கொடுமுடிக் கோயில்முன் குறுகிச்*
*சங்கவெண் குழையார் உழைவலஞ் செய்து*
*சார்ந்தடி அன்பினில் தாழ்ந்து*
*பொங்கிய வேட்கை மெருகிடத் தொழுது*
*புனிதர்பொன் மேனியை நோக்கி*
*இங்கிவர் தம்மை மறக்கவொண் ணாதென்*
*றெழுந்தமெய்க் குறிப்பினில் எடுப்ப* 86

*அண்ணலார் அடிகள் மறக்கினும் நாம*
*அஞ்செழுந் தறிய எப்பொழுதும்*
*எண்ணிய நாவே இன்சுவை பெருக*
*இடையறா தியம்பும்என் றிதனைத்*
*திண்ணிய உணர்விற் கொள்பவர் மற்றுப்*
*பற்றிலேன் எனச்செழுந் தமிழால்*
*நண்ணிய அன்பில் பிணிப்புற நவின்றார்*
*நமச்சி வாயத்திருப் பதிகம்.* 87

*உலகெலாம் உய்ய உறுதியாம் பதிகம்*
*உரைத்துமெய் உணர்வுறா ஒருமை*
*நிலவிய சிந்தை யுடன்திருவருளால்*
*நீங்குவர் பாங்குநற் பதிகள்*
*பலவுமுன் பணிந்து பரமர்தாள் போற்றிப்*
*போந்துதன் பனிமலர்ப் படைப்பைக்*
*குலவும்அக் கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர்*
*குறுகினார் முறுகும்ஆ தரவால்* *88*

## 7. அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்

*தனதனத் தனனத் தனதான*
*தனதனத் தனனத் தனதான*

இருவினைப் பிறவிக் கடல்மூழ்கி
இடர்கள் பட்டலையப் புகுதாதே
திருவருட் கருணை ப்ரபையாலே
திறமெனக் கதியைப் பெறுவேனோ
அரியயற் கறிதற் கரியோனே
அடியவர்க் கெளியற் புதநேயா
குருவெனச் சிவனுக் கருள்போதா
கொடுமுடிக் குமரப் பெருமானே. (1)

*தாந்தத் தனதன தாந்தத் தனதன*
*தாந்தத் தனதன தனதான*

காந்தட் கரவளை சேந்துற் றிடமத
காண்டத் தரிவைய ருடனுாசி
காந்தத் துறவென வீழ்ந்தப் படுகுறி
காண்டற் கனுபவ விதமேவிச்
சாந்தைத் தடவிய கூந்தற் கருமுகில்
சாய்ந்திட் டயில்விழி குழைமீதே
தாண்டிப் பொரவுடை தீண்டித் தனகிரி
தாங்கித் தழுவுதல் ஒழியேனோ
மாந்தர்க் கமரர்கள் வேந்தர்க் கவரவர்

வாஞ்சைப் படியருள் வயலூரா.
வான்கிட் டியபெரு மூங்கிற் புனமிசை
மான்சிற் றடிதொழ மதிகாமி
பாந்தட் சடைமுடி யேந்திக் குலவிய
பாண்டிக் கொடுமுடி உடையாரும்
பாங்கிற் பரகுரு வாங்கற் பனையொடு
பாண்சொற் பரவிய பெருமாளே. (2)

## 8. வடிவுள்ளநாயகி பஞ்சரத்னம்

(வித்துவான் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் இயற்றியது)

அம்மானைக் கொண்டா னணிமா னிடத்தளித்த
நம்மானைக் கன்றினையே நாடு.

சீர்கொண்ட பாம்பனைமேற் றுயில்மாலும் திசைமுகனும்
ஏர்கொண்ட தேவர்கள் யாவரும் போற்றவிருந் தருள்செய்
பேர்கொண்ட பாண்டிக்கொடுமுடி லிங்கர்ப் பிரிந்தறியா
வார்கொண்ட கொங்கைத் திருவேகறைசை வடிவம்மையே. (1)

காரொன்று கூந்தலினனொன்று நீண்முடி காவிவிழி
சீரொன்று சோதிவதனம்புன்மூரல் செழுந் தரளத்
தாரொன்று கொங்கையென் னெஞ்சத்தொளிரு நின்றன்மை கண்டேன்
வாரொன்று சோலைமதிதோய் கறைசை வடிவம்மையே. (2)

கற்றாருறவுங் கல்லாதார் பிறிவுமெக் காலத்திலும்
வற்றாதவாழ்வு நின்வார்கழற் கன்பும்வல் வஞ்சகர்பால்
சற்றாயினுஞ் செலவேண்டாத் தகைமையுந் தந்தெனையாள்
மற்றேருழவர் வயல்சூழ் கறைசை வடிவம்மையே (3)

விருந்தென்றுநோய்க் ளுடலினைப் பற்றமிக மெலிந்தே
மருந்தொன்றை நாடியலையுமென் மீதினில் வஞ்சகஞ்சேர்
திருந்தொன்றி லாதகயவர்மென் மேற்செயுந் தீங்குகளில்
வருந்தமுடியா தருள்வாய் கறைசை வடிவம்மையே. (4)

இல்லையென்போர்க் கிலையென்னா துதவு மியல்புடனே
வல்லையென்போர்க்குத் துணைசெய்யும் வன்மையும் வாய்ந்திடச் செய்
தல்லையுறுத்தெம் வினைமா சொழிப்பை யரையத்திலே
மல்லிகைமுல்லை மணமார் கறைசை வடிவம்மையே. (5)

## 9. கொடுமுடிக் குறவஞ்சி நாடகம்

(திருக்கயிலாய பரம்பரை கச்சிமாகேசுரருளொருவராகிய கொடுமுடி கச்சியப்ப ஓதுவார் திருக்குமாரர் மலைக்கொழுந்து நாவலர் இயற்றியது)

### காப்புச் செய்யுள்

*புகழ்மேவு சந்திரசே கரநீல கண்டனைப்*
*பூவைவடி வுமை பங்கனைப்*
*பொன்னிநதி வாசனைக் கொடுமுடி மகேசுர*
*புராதனனை யினிது வாழ்த்தி*
*வகைமேவு பஞ்சலட சணவிலக் கியப்பிரபல*
*வாக்கியப் பிரபந்த மதுர*
*வசனப்பிர சங்கமிசை பரதவித கணிதகுற*
*வஞ்சிநா டகமி யம்ப*
*வகிலமுக வரசுதா கரகிருபா கரமுடீ*
*காருட கோடீ ரமீ*
*தணியுரக கணபண கணேசுர குணேசுர*
*விலாட சோபித படீரச்*
*சிகரநெடு முடியின்வட வரையைமடல் பெறவெழுது*
*திரிகரட கடக போலத்*
*திரியம்பகம் பக்கும்ப விம்பவே ரம்பமுக*
*சிந்துரப் பிள்ளை துணையே.*

*கார்மேவு கயமுக விநாயகனை யுதவுசிவ*

*கல்யாண குணதருண கருணை நடராஜா*

*சீர்மேவு கமலபரி யுரசரண கிரணமிகு*

*திவ்வியசோபித ரசித சீர்மகயி லாசா*

*தார்மேவு மிதழிநதி யணிமகுட கோடீர*

*சந்திரசே கரபர திரியம்பக விலாசா*

*கார்மேவு களபமுலை யிலகுவடி வுமையாக*

*வாசகொடுமுடி நேசமகுடாச லேசா ஜெயஜெய.*

*சக்திவடி வுமையாக சைவபூசண யோக*

*பக்தர்பணி புரியாத பாண்டு வனநாதா*

*உத்தமகுணா நேயஓ நமசிவாய ஜெய*

*முத்தமிழ் தேர்துங்க கொடுமுடி மகுட லிங்கஜெயஜெய.*

## பெண்கள் பவனி காண்டல்

மருவாயிடை தரனந்தர வருகாவிரி தருசீர்

வளமேமெறு கறையூர்மணி மாடஞ்செறி மறுகில்

கடைவாயிடை வருமானொரு பெருமான்மலை மருமான்

கைமானிணை காணார்மயல் கண்மானிணை கண்டார்

நடைவாயிடை யுடைசோரவு மடவாரெதி ரோடி

நாணித்தலை கவில்வார்சிலர் வேணிக்கலை புனைவார்

விடையார்வடி வுடையார்கொடு முடியார்வரன் மடவார்.

மீறும்பவ னிகள்கானுவி லாசஞ்சொலு வாரே.

